# குமரன்

ஆரம் 10, முத்து 21

January 05, 1933

Record no. 313

REG. NO. M. 1823. 16 பக்கங்கள். KUMARAN WEEKLY.

வாரப் பதிப்பு.
சந்தா விவரம்.
உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
வெளிநாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 7-0-0

# குமரன்

மாதப் பதிப்பு.
சந்தா விவரம்.
உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 0-12-0
வெளிநாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 1-4-0
ஆடிமீ வருஷ ஆரம்பம்.

வியாழன்தோறும் வெளிவரும்.
PUBLISHED EVERY THURSDAY

ஆரம் 10. காரைக்குடி, ஆங்கீரச-ஹூ மார்கழி-மீ ௨௨-உ (5—1—33.) முத்து 21

# ஜாமொரின்—மகாத்மா கடிதப்போக்குவரவு.

மகாத்மா காந்தி, தமக்கும் கள்ளிக்கோட்டை ஜாமொரினுக்கும் குருவாயூர் சம்பந்தமாய் நடந்த முக்கியமான கடிதப் போக்கு வரத்தை, இப்பொழுது வெளியிட்டிருக்கிறார். அது வருமாறு:—

மகாத்மா ஜாமொரினுக்கு 24-12-32௨ அனுப்பிய தந்தியாவது:—

"பிரதி வருடமும் மூன்று நாட்களுக்கு குருவாயூர் கோயில் ஹரிஜனங்கள் உள்பட எல்லா இந்துக்களும் அனுமதிக்கப்படுவதாக அறிகிறேன். இது உண்மை தானா என்பதற்குப் பதில் தந்தி கொடுங்கள்.—காந்தி"

ஜாமொரின் மகாத்மாவுக்கு எழுதியுள்ள கடிதம் வருமாறு:—

அன்புள்ள ஐயா,

தங்கள் 23ந்தேதி தந்தி எனக்கு இன்று காலையில் தான் கிடைத்தது. ஏனெனில் நான் கோட்டக்கலிலிருந்து 14ந்தேதி புறப்பட்டு வந்துவிட்டேன். இன்றைய தினம் தங்களுக்குப்பின் வரும் தந்திகொடுத்திருக்கிறேன்.

"உங்கள் 23ந்தேதி தந்தி கிடைத்தது. தாங்கள் கூறும் விஷயம் உண்மையல்ல. கடிதம் வருகிறது"

வருஷத்தில் 3 நாட்களில் ஹரிஜனங்கள் உள்பட எல்லா இந்துக்களும் குருவாயூர் கோயிலில் அனுமதிக்கப் படுகிறார்களா? என்று கேட்டிருக்கிறீர்கள். மூன்று நாள் அனுமதிக்கப்படுகிறார்கள் என்ற விஷயம் உண்மையல்ல. கோயிலுக்குள்வர ஹரிஜனங்களுக்கு எந்தநாளிலும் உரிமை கிடையாது. ஆனால் கார்த்திகை ஏகாதசி தினத்தன்று ஏராளமான ஜனங்கள் கோயிலுக்குள் வருகிறபடியாலும், எங்கெந்த ஜாதியார் கோயிலுக்குள் வருகிறார்கள் என்பதைக் கண்டறிவது கஷ்டமாகையாலும், தீண்டாதவர் யாராவது வந்திருக்கக்கூடும் என்பதை உத்தேசித்து, துவாதசியன்று சுத்தி பூஜைகள் செய்யப்படுகின்றன. இதைத் தவிர, ஏகாதசியன்று ஹரிஜனங்கள் அனுமதிக்கப் படுகிறார்கள் என்பது உண்மையல்ல. அவர்கள் கோயிலுக்குள் வருவதே கிடையாது. இன்னும் அதிகத் தகவல்கள் வேண்டுமானால், சென்ற ஜூன்மீ சென்னை ஹைகோர்ட்டில் நீதிபதி ராமேசம் பந்துலு அவர்கள் அளித்திருக்கும் தீர்ப்பில் காணலாம். இத் தீர்ப்பின் நகல் ஒன்று தங்களிடம் இருக்குமென்று நம்புகிறேன்.

தங்கள் நம்பிக்கையுள்ள
(ஒப்பம்) மானவேதன் ராஜா"

ஜனவரி 1ந்தேதியன்று மகாத்மா காந்தி ஜாமொரினுக்கு எழுதிய கடிதம் வருமாறு:—

அன்புள்ள நண்பரே,

உங்கள் கடிதத்திற்கு வந்தனமளிக்கிறேன். அதைப் பார்த்து வருத்தத்தோடு ஆச்சரியமுமடைந்தேன். பரஸ்பரம் நல்லபிப்பிராயமும் ஒளியாமல் விஷயங்களை அறிவிக்கும் தன்மையும் இருக்க வேண்டுமென்று நான் எதிர்பார்க்கிறேன். பிரஸ்தாபக் கடிதத்தில் நல்லபிப்பிராயம் என்பதே காணப்படவில்லை. கார்த்திகை ஏகாதசி தினத்தன்று நீங்கள் எந்த தீண்டாதவரையாவது கோயிலுக்குள் வரக்கூடாது என்று விரட்டியிருக்கிறீர்களா? ஆயிரக்கணக்கான தீண்டாத வகுப்பு ஆண்களும் பெண்களும், இல்லை என்றால் நூற்றுக் கணக்காகவாவது குருவாயூர் கோயிலில் ஏகாதசி தினத்தன்று உள்ளே வருகிறார்கள் என்று ருசு செய்யக்கூடும். இவர்களில் சிலரையாவது இன்ன ஜாதி என்று கண்டு பிடிப்பது கஷ்டமாயிருக்காது. இந்தத் தினத்தன்று தீண்டாத வகுப்பில் ஏராளமான ஜனங்கள் கோயிலுக்குள் வந்து ஸ்வாமி தரிசனம் செய்கிறார்கள் என்கிற தகவல்கள் என்னிடம் இருக்கின்றன.

சென்னை ஹைகோர்ட்டின் தீர்ப்பைப் படித்துப் பார்க்குமாறு எனக்குக் கூறியிருக்கிறீர்கள். ஏகாதசி தினத்தன்று தீண்டாதவர்கள் திருட்டுத்தனமாயில்லாமல் பகிரங்கமாய் கோயிலுக்குள் வருகிறார்கள் என்பதையும் இந்த உரிமை அவர்களுக்கு இருக்கிறது என்பதையும், அத்தீர்ப்பு மெய்ப்பிக்கிறதென்று நான் கருதுகிறேன். அத் தீர்ப்புக் கூறுவதாவது:-

"குருவாயூர்க் கோயில்ஒரு தனிப்பட்ட நபருக்குச் சொந்தமானதல்ல; பொதுவான கோயிலாகும். நெடுங்காலமாக அனுஷ்டானத்திலிருக்கும் ஆசார விதிகளுக்குக் கட்டுப்பட்டு, அதில் எல்லா ஹிந்துக்களுக்கும் ஸ்வாமி தரிசனம் செய்ய உரிமையுண்டு. உயர்ந்த ஜாதியார்கள் வருடத்தில் எல்லா தினங்களிலும் ஆலய அனுமதியை அனுபவிக்கும் உரிமை பெற்றிருக்கிறார்கள். ஆகவே கோயிலுக்குப் போகும் பாதைகளிலும் கோயிலுக்குச் சுற்றியுள்ள பாதைகளிலும் அவர்களுக்கு அனுபவ பாத்தியம் உண்டு. தாழ்ந்த ஜாதியார் ஏகாதசி திருவிழா தினத்தன்று மாத்திரமே கோயிலுக்குள் அனுமதிக்கப் படுகிறார்கள். அந்தத் தினத்தன்று அவர்களுக்கு இந்தப் பாதைகளை எல்லாம் உபயோகிக்கும் உரிமையுண்டு. மற்றத் தினங்களில் ஆலய உரிமையும் சாலை உரிமையும் இவர்களுக்கு இல்லை. நெடுங்காலமாக இவ் வழக்கம் அனுஷ்டானத்தில் இருந்து வந்திருக்கிறது."

அத்தீர்ப்பு மேலும் கூறுவதாவது:—

"தாழ்ந்த வகுப்பினர் என்போரும் ஹிந்துக்களேயாவர். இதை உத்தேசித்தே வருடத்தில் ஒருநாள் அவர்களுக்கு ஆலய உரிமை வழங்கப்பட்டிருக்கிறது என்று அறியக் கிடக்கிறது. கூட்டமாய் வரும் ஜனங்களின் ஜாதியைக் கண்டுபிடிக்க முடியாது என்ற வெளிக்காரணம் சொல்லப்படுகிறதாயினும், அந்தரங்க எண்ணம் ஏகாதசி தினத்தன்று எல்லா ஜாதியாரையும் கோயிலுக்குள் அனுமதிக்க வேண்டும் என்பது தான் என்பதில் சந்தேகமில்லை. ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்தவரான ஸ்ரீ ராமாநுஜரின் உபதேசமும் இதுவே. வருடத்தில் ஒரு நாள் எல்லா வைஷ்ணவ கோயில்களிலும் எல்லா ஜாதியாரும் அனுமதிக்கப்பட வேண்டும் என்பது அவரது கொள்கை. (நீதிபதி ராமேசம் அவர்கள் தீர்ப்பு.)

மேலே குறிக்கப்பட்டிருக்கும் தீர்ப்பின் இரண்டு குறிப்புகள் ஏகாதசி தினத்தன்று தீண்டப்படாதவர்கள் எவ்விதத் தடையும் ஆக்ஷேபனையும் இன்றி ஆலய அனுமதி பெறுகிறார்கள் என்பதை முடிவாக அறிவிக்கின்றன. இது பொதுஜனங்களுக்கு மிகவும் முக்கியமான தாகையால், இந்தக் கடிதப் போக்குவரத்தைப் பத்திரிகைகளில் பிரசுரிக்கிறேன்.

உங்கள் உண்மையுள்ள
(ஒப்பம்) காந்தி.

## ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி வீரவுரை.

சாத்திரங்களையும் புராணங்களையும், மதக்கட்டளைகளையும் மேற் கோள்களையும் கட்டி வைத்துவிட்டு, சுயேச்சையாய் வாழ்க்கையை யனுபவிக்க வேண்டும் என்று 'ஜகத்குரு' ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி அடையாற்றில் பிரசங்கம் செய்தார். இது பிரம்மஞானிகள் உள்ளத்தில் பெரும் கலக்கத்தை யுண்டாக்கி விட்டது. சுயேச்சையின்பத்தை யனுபவிக்க இது தான் 'ஜகத் குருவின்' உபதேசமோ என்று முணுமுணுக்கிறார்கள்.

## ஜனவரி 8௨ குருவாயூர் தினம்.

ஸ்ரீ. ஜி. டி. பிர்லா அறிவிப்பதாவது:—

மகாத்மாவின் உண்ணாவிரதம் தாத்காலிகமாக நிறுத்தப்பட்டிருக்கிறது. ஆனால் அவரது உயிருக்கு வந்திருக்கும் ஆபத்து நீங்கிவிடவில்லை. குருவாயூர் கோயிலில் ஹரிஜனங்களுக்கு அனுமதி கிடைக்க வேண்டும். சட்ட ரீதியான தடைகள் தொலையவேண்டும். இந்த இரண்டும் கைகூடினால் தான், நாம் வெற்றி பெற்றவர்களாகக் கூடும். மகாத்மாவின் அனுமதி பெற்று ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியர் வெளியிட்டிருக்கும் வேண்டுகோளின்படி தேசமக்கள் அனைவரும் ஜனவரி மாதம் 8ந்தேதியை அகில இந்திய குருவாயூர் தினமாக அனுஷ்டித்து, ஆலய அனுமதி மசோதாக்களுக்கு வைசிராய் அனுமதி கொடுக்கும்படி தந்தி கொடுக்க வேண்டும். வைசிராய் ஏற்கனவே அனுமதி கொடுத்திருக்க வேண்டும். ஹரிஜன ஆலய அனுமதியை வற்புறுத்தும் அகில இந்திய மாதர்கள் பேட்டி கண்டு பேச விரும்பியதற்கு வைசிராய் மறுத்துவிட்டார். ஆகவே சுப்பராயன் மசோதாவுக்குக் காலதாமத மின்றி அனுமதியளிக்குமாறு பொதுஜன அபிப்பிராயம் வற்புறுத்த வேண்டும்.

## தீண்டாமையை ஒழியுங்கள்.

### தலைவர்களின் வேண்டுகோள்.

பாபு ராஜேந்திரப்பிரசாத் அவர்களின் தலைமையின் கீழ் பிரபல ஹிந்துத் தலைவர்கள் அடங்கிய பொதுக்கூட்டம் ஒன்று நடைபெற்றது. குருவாயூர் பொதுஜன வாக்கெடுத்த பிறகு என்ன செய்ய வேண்டும் என்பதைக் குறித்து ஆலோசனை செய்தார்கள். கல்கத்தா கார்ப்பொரேஷன் மேயர், டாக்டர் மூஞ்ஜே, ஜே. என். பாசு, பி. சி. சாட்டர்ஜி, அகில் தத்தர். ஸ்ரீமதி மோஹினிதேவி முதலியவர்கள் நடவடிக்கைகளில் கலந்து கொண்டார்கள்.

### தீர்மானங்கள்.

1. குருவாயூர் பொதுஜன வாக்கெடுப்பதில் சேர்ந்து உழைத்த அனைவரையும்இப் பொதுக் கூட்டம் பாராட்டுகிறது.

2. ஹிந்துக்கள் அனைவரும் ஒற்றுமையாய்ச் சேர்ந்து, ஹரிஜனங்களுக்கு ஆலய அனுமதி கொடுத்து, பிற ஜாதியாருடன் அவர்கள் சமத்தவமாய் இருக்கும்படி சமூகத் தடைகளை எல்லாம் நீக்கவேண்டும்.

3. ஹரிஜன ஆலய அனுமதி மசோதாக்களுக்கு இன்னும் வைசிராய் அனுமதி கொடுக்காதிருப்பதற்கு இக்கூட்டம் ஏமாற்ற மடைகிறது.

## ஜாமொரின் குடும்பத்தார் ஆதரவு.

ஜாமொரின் குடும்பத்தைச் சேர்ந்த ஸ்ரீ தேவி தம்புராட்டி என்னும் அம்மையார் ஹரிஜன ஆலய அனுமதியை ஆதரித்து, கோயில் பணத்தை சத்தியாக்கிரகக் கமிட்டியாரிடம் கொடுத்து விட்டார்.

## பொறுக்கு மணிகள்.

நடுச்சாமத்துக்கு முன்பு ஒரு மணி நேரம்தூங்குவதுசாமத்திற்குப் பிறகு இரண்டுமணிநேரம் தூங்குவதற்குச் சமானமென்று சொல்லப்படுகிறது.

0 0 0

முதல் முதலில் பாரிஸ் பட்டணத்திலிருந்து லண்டன் நகரத்திற்குச் செல்லும் ஆகாயக் கப்பலில்தான் சினிமாப்படக்காட்சிக் காண்பிக்கப்பட்டதாம்.

0 0 0

அமெரிக்கர்கள் வருஷவாரி 8 கோடி 80 லட்சம் பவுன் மிருகங்கள் வளர்ப்பதில் செலவிடுகின்றார்கள். நூற்றுக்கு எண்பது விகிதக் குடும்பங்கள் மிருகங்கள் வளர்க்கின்றன.

0 0 0

லண்டனில் தாமாகச் செய்திகளை மாற்றிக் கொள்ளும் 50 டெலபோன் மாற்றும் நிலையங்களிருக்கின்றன; அவற்றில் மொத்த மிருக்கும் லைன்கள் (தந்திகள்) 220000 ஆம்.

0 0 0

பல்கேரியா தேசத்தில் அழகுக்குக்கூடவும் வரி விதிக்கப்படுகின்றது. பெண்கள் தலையை பளபளப்பாக்கவோ இதரவழிகளில் உடம்பை சிங்காரிக்கவோ செய்தால் அதிகவரி கொடுக்க வேண்டும்.

0 0 0

L. and N. E. ரயில்வேயில் கூடப் அடிக்கும் வேலை பார்த்துவரும் தொழிலாளிகட்கு ஒரு வாரத்தில் இரண்டு தரம் நடனம், கோலாட்டம் முதலிய உடலுக்குறுதி தரும் பயிற்சிகள் அளிக்கப்படுகின்றன.

0 0 0

ந்யூஜிலாந்தில் கீ என்ற ஒருவிதக் கிளியிருக்கின்றது. அப்பறவை ஆடுகளைக்கொன்று தின்னும். அது வெட்டையாடப் போகும் போது கூட்டம் கூட்டமாகச் செல்வதே இயல்பு. சர்க்கார்ஒவ்வொரு கொல்லப்பட்ட கிளிக்காகவும் பரிசு கொடுத்து வருகிறார்கள்.

0 0 0

பிரேக் நகரத்தில் வசித்து வந்த ஒரு ஜீக்கோஸ்லோவகியன் தன் தந்தையின் 50 வது பிறந்த தினத்தில் வாங்கிக் கொடுத்த பரிசைப்பார்த்த தந்தைஆத்திரம்கொண்டு ஒருதடியால் புதல்வனை ஓங்கியடித்துவிட்டான். அவ்வடியால் புதல்வன் இறந்துவிட்டான். அவன் கொடுத்தபரிசு ஒரு சவப்பெட்டியாம்.

0 0 0

ஆபிரிக்காவில் சூடான் பிரதேசத்தில் உள்ள அகேஷியா மரச் சோலைகளில் பாடும் மரங்களிருக்கின்றன. ஒருவிதப் பூச்சி சிறு கொம்புகளைத் துளைத்துவிடுவதால் காற்றடிக்கும் போது அவை இனிய தொனியை வெளியிடுவதே மேற்படி பாட்டுக்கு ஏதுவாம். வைதீகர்கள் இப்பாட்டைத்தேவதைகளின் தொனி என்று கருதுகின்றனர்.

0 0 0

சீனு தேசத்தில் சிஹீஸிப் பிரதேசத்தில் யூடியன் என்ற ஊரில் ஹிஸியா ஷூஹான் என்ற ஒரு மனிதன் இருந்தான். அவனுடைய உடல் பிறவி முதல் கண்ணுடி போன்ற தோலினுல் மூடப்பட்டிருந்ததால் குடல், இருதயம் முதலியன வெளியே தெரிந்து கொண்டிருந்தன. இவர் சர்க்கார் உத்தியோகத்திலமர்ந்து லஞ்சம் வாங்கியதாகக் குற்றம் சாட்டப்பட்டதால் மரணதண்டனை விதிக்கப்பட்டார் என்றாலும் அரசாங்கத்தார் மன்னித்துவிட்டனர். இப்போது மக்கள் இவரை தீர்க்க தரிசியாகக் கொண்டாடுகின்றனர்.

## நம்மவர் ஆராய்ந்தறிதற்கு இது தான் சமயம்.

திருவாளர் மு. சின்னையா செட்டியார்.

III

பெண்களுக்கு மறுமணம் செய்யும் ஏற்பாடிருந்தால், முதலாவது பெண்ணுக்குப் பணம் கொடுத்த லென்னும் அபாயமான பெரிய தேவை ஒழியும்; எல்லோரும் மங்களமாக வாழ்வார்கள்; சாமான்யமான குடும்பங்களுக்குக் கல்யாணத்தைப் பற்றிய அச்சம் தீரும். சாமான் சேகரித்தல், சாமான் வைத்தல், அதைக்கண்டு மகிழ்தல் என்னும் வேலைபற்ற வேலை ஒழியும். அந்த ஆகாத சாமான்களுக்கு அடுக்கடுக்காக அறை வீடுகளும் அதன் அங்கங்களாக மச்சு மாளிகைகளும் வேண்டாம். டம்பச் செலவுகளுக்கு அவசியமிராது. அவலை நினைத்துக்கொண்டு உரலை இடிக்கவேண்டாம். கல்யாணத்தைத் தொடர்ந்து செய்யப்படும் சீர் முறைகளுக்கெல்லாம் வால் நீளாது. அணிற்குஞ்சுகளைப்போலும் எலிக்குஞ்சுகளைப் போலுமில்லாமல் திடசரீரிகளான சந்ததி உண்டாகும். பிரஸவகாலத்து மரணம் குறையும். அலங்கோலமான யாத்திரை, அநாகரிகமான சஞ்சாரம், அசட்டுத்தனமான சச்சரவுகள் ஒழியும். "உறங்குவது போலும் சாக்காடு, உறங்கிவிழிப்பது போலும் பிறப்பு" என்ற முதுமொழிப்படி பிறந்தபொழுதே இறப்பது நிச்சயம். நிச்சயமாயினும் அந்தச் சாவு அகாலத்தில் நேர்ந்தால் அது துக்கந்தான். ஆயினும் அந்தத் துக்கம் ஒரு சில நாட்களில் அல்லது மாதங்களில் அல்லது வருஷங்களில் மறைந்து விடுகிறது. மனம் ஆறுதலடைந்து சமாதானமுமாகிவிடுகிறது. ஒன்று மறியாத சிறு பெண்களுக்குக் (கல்யாணம்) களியாட்டுச் செய்து நகைகளையும், சேலை வேஷ்டிகளையும் அணிவதில் தங்கள் கைவரிசையைக் காட்டித் தடபுடலாகத் திரிந்துவிட்டு தங்கள் கடன் தீர்ந்துவிட்டதாக அகமகிழ்ந்த பெற்றோர்கள், அந்த மருமகனுக்கு அர்ப்பாயுசாக மரணம் சம்பவித்து விட்டால் அந்த இயற்கையான துக்கம் ஒருபுற மிருக்க, தாங்களாக வருவித்துக் கொள்ளுகிற துக்கம் பெரிதாகி சிறு பொழுது மணியிலிருந்த தண்டத்துக்காக அப்பெண்ணை அலங்கோலப்படுத்தி அதன் உயிரை வாங்குவது போல் ஆடையணிகளை யெல்லாம் வாங்கி அழுக்கைப் பழக்கி சிந்திய மூக்கும் சிவந்த கண்ணுமாய் முக்காடிட்டு மூலையில்லாது அது (அப்பெண்) ஓலமிட்டு அழத் தாங்களும் அழுது விடிந்தெழுந்தால் அப் பெண்ணைப் பார்த்துப் பார்த்து மாருக்கவலையடைகிறார்கள். மறுமணம் செய்வதென்ற ஏற்பாடிருந்தால் இந்த அநாவசியமான துக்கத்துக்கும் கவலைக்கும் இடமிருக்குமா?

உலகத்தில் பல பாகங்களிலும் இருநூறு கோடி ஜனங்களிருக்கிறார்கள். அவர்களில் இந்தியாவைத் தவிர ஏனைய தேயத்துப் பெண்கள் மறுமணம் செய்து கொள்ளுவதில் ஒரு தடையுமில்லை. இந்தியாவிலுள்ள முப்பத்தைந்து கோடி ஜனங்களிலும் மகம்மதியர், கிறிஸ்துவர், சீக்கியர், பார்சிகள் மூன்றில் ஒருபாகத்தினராக இருக்கிறார்கள். அவர்களுள்ளும் பெண்களின் மறுமணத்துக்குத் தடைகளில்லை. எஞ்சிய இரண்டு பாகத்தினரான சுமார் இருபத்திரண்டு கோடி. ஹிந்துக்களில் இருபது கோடி ஹிந்துக்கள் ஆண்களும் பெண்களும் மறுமணம் செய்து கொள்ளும் வழக்கமுடையோராக இருக்கின்றனர். இனி மீதமிருப்பது இரண்டு கோடிதான். இந்த இரண்டு கோடி மக்களிலும் ஒரு கோடியான ஆண்மக்கள். மறுமணம் மூன்றும் மணம் நான்காம் மணம் என்று மணம் மணமாகச் செய்து கொள்ளுவதில் தடைகளில்லை. ஆகவே உலகின் ஜனத்தொகையில் இருநூற்றில் ஒரு பாகந்தான் துரதிர்ஷ்டமுள்ள பாகமாக இருக்கிறது. அந்தத் துரதிஷ்டமுள்ள குறுகிய மைனாரிட்டியில் நமது சமூகமும் ஒன்றாக இருக்கிறது. பெண்கள் மறுமணம் செய்து கொள்ளுவதால் பெருந் தீமைகளுண்டாகி விடுமென்று அஞ்சுகிறவர்கள் மேற்கூறிய நூற்றுத் தொண்ணூற்றொன்பது கோடி ஜனங்களைப்பற்றிச் சிந்திக்க வேண்டும். அந்த சமூகமெல்லாம் கெட்டுப்போய் விட்டனவா? இல்லை, நம்மினும் சிறப்பாக வாழ்கின்றன! "உலகத்தோடொட்ட வொழுகல் பல கற்றுங்கல்லாரறி விலாதார்" என்ற திருக்குறட் செய்யுளுக்குப் பரிமேலழகர் உரையின் விளக்கத்தில் "அறநூல் சொல்லியவற்றுள் இக்காலத்திற்கு ஏலாதன ஒழிந்து சொல்லாதன வற்றுள் ஏற்பன கொண்டுவருதலான் அவையுமடங்க உலகத்தோடொட்ட வென்றும்" என்று கூறியிருப்பது பெரிதும் போற்றத்தக்கது. கால தேசவர்த்தமானங்களையனுசரித்து ஜனசமூகத்துக்கு எவை எவை நல்லனவாக இருக்கின்றனவோ அவைகளைக்கைக் கொள்ளுதல் தான் விவேகமாகும். இரண்டாயிரம் வருடங்கட்கு முன்பிருந்த பழக்க வழக்கங்கள் இப்போதுபொருந்துமா? இரண்டாயிரம் வருஷங்கட்கு முன் நம்மவர் தூரதேயங்கட்குக் கப்பல் யாத்திரை செய்து அங்கு வட்டிக்கடை வைத்துத் தொழிற் செய்ததுண்டா? சட்டை தொப்பிகள் அணிந்ததுண்டா? மோட்டார் காரில் ஏறியதுண்டா? ஆகாயத்திற் பறந்ததுண்டா? இங்குப் புட்டியும் பேனுவும் வைத்துக் கொண்டு கடிதமெழுதியதுண்டா? பெண்களூர்ப் பட்டுப்புடவைகளுண்டா? வயிர நகைகளுண்டா? வெள்ளிப் பாத்திரங்களுண்டா? கல்யாணம்முதலிய விசேடங்களில் சமையற் செட்டுண்டா? கூடை கூடையாகப் பழங்கள் வந்ததுண்டா? யானை குதிரை முதலிய எடுபிடிகளுண்டா? மங்கு, மரவை, பீங்கான், ஜாடிகளுண்டா? வீடு நிறையச் சாமான்கள் வைத்ததுண்டா? பெரிய பெரிய வீடுகளுண்டா? அதில் இத்தாலி, பிரான்சு, இங்கிலாண்டு ஜர்மனி, ஜப்பான் முதலிய தேயங்களின் தளக்கற்கள் பதித்ததுண்டா? மின்சார விளக்குகள் தண்ணீர்க்குழாய்களுண்டா? இன்னும் இவைபோல் எத்தனையோ புதியசௌகர்யங்கள் ஏற்பட்டு அவற்றை நாமும் அனுபவித்து வருகிறோமன்றோ! அவையெல்லாம் பழய முறைகளல்லவென்று தள்ளிவிட்டோமா? புதிய முறைகளென்றாலும் ஜன சமூகத்துக்கு நல்லவை யென்று தானே ஒப்புக்கொண்டிருக்கிறோம். அது போல் இன்னும் நல்ல தென்றிருப்பதை பேன் அங்கீகரிக்கக் கூடாது? பெண்களுக்கு மறுமணம் செய்வது தீமையென்று ஒருவரும் நிரூபிக்கமுடியாது. வழக்கமில்லாத காரியமென்று தான் சொல்ல முடியும். வழக்கமில்லாத காரியமாயினும் அனுபவத்தில் நல்லதாயின் அதை மாற்றிக் கொள்வதில் குற்றமொன்றும் இல்லை முதலெடுப்பில் நெடுகாட் பழகிய மனத்தின் தன்மையால் அனுசிதமான காரியமாகத் தான் தோற்றும் காலமாகவாக அத்தோற்றம் மாறிவிடும். பிறகு அதன் பலனும் நன்மையும் ஒரு சிறைக்கூடத்திலிருந்து விடுபட்டது போலிருக்கும் இது உலகானுபவத்தில் நாம் காணக்கிடக்கும் உண்மையாம்! ஒருகாலத்தில் ஹிந்துக்களில் ஒரு வகுப்பார் புருஷனையிழந்த பெண்களை உடன்கட்டை யேற்றிச் சுட்டுவந்ததும் நூறுவருஷங்கட்கு முன் அவ்வழக்கம் சட்டபூர்வமாகத் தடுக்கப்பட்டதாகவும் நாம் அறிகிறோம் அப்பெண்கள் இப்போது பழிக்கப்படவில்லை நம் முன்னும் சுமார் முப்பது வருஷங்கட்கு முன் புருஷனையிழந்த பெண்கள், கழுத்தில் சரடு என்னும் ஒரு தங்கவளையத்தையும் பிறகு உருத்திராக்ஷத்தையும் அணிந்திருந்தார்கள். இப்போது நல்ல நல்ல நினுசான சங்கிலிகள் மோதிரங்கள் அணிந்து கொள்ளுகிறார்கள் இதுவும் பழிக்கப்படவில்லை. ஆதலால் பெண்களுக்கு மறுமணம் செய்வதால் யாதொரு தோஷமும் விபரீதமும் குற்றமும் ஏற்பட்டுவிடாது இன்னும் அதுபற்றிய சில அனுபவ நிஜச்சிகளையும் விதிவிலக்குகளையும் அடுத்த அத்தியாயத்திற் கூறுகிறேன்.

## விகடத் துணுக்குகள்.

தாயார்:—அடே, இந்த ரூபாயின் அருகெல்லாம் தேய்ந்திருக்கிறதே, ஏன்?

புதல்வன்:—அந்த ரூபாய் அழியுமாவென்று சோதனை பார்த்தேன் அம்மா.

0 0 0

ஒரு பெண்:—ஸ்டவ் (இயந்திர அடுப்பு) ஒரு சௌகரியமான கருவிதான். அதனைக்கண்டு பிடித்தவர்யார்?

கணவன்:—எந்தப்பேடியோ; மனைவி காலையில் எழுந்திருந்ததும் அடுப்பெரிக்கச்சொன்னாள்போலிருக்கிறது; அவ்வியந்திரத்தைக் கண்டு பிடித்திருக்கிறான்.

0 0 0

பலநாம் ஒரு டாக்டரிடம் மருந்து சாப்பிட்டும் நோய் குணமாகாததைக் கண்டு கலங்கிய ஒரு நோயாளியிடம் டாக்டர்:—தம்பி பயப்படாதே, நானும் இப்படிப்பட்ட நோயினுல் கஷ்டப்பட்டிருக்கிறேன். உன்னை சந்தேகமின்றிகுணப்படுத்திவிடுகிறேன்.

நோயாளி:—தயவு செய்து எனக்கு மருந்து கொடுக்கு முன்பு உங்களுக்கு மருந்து கொத்துக் குணப்படுத்திய டாக்டர் யார் என்றுசொல்வீர்களா?

0 0 0

ஒரு கம்பனியில் சுருண்ட தலைமயிரும் இருண்ட நிறமுமுடைய ஒரு வாலிபன் வேலைக்கிருந்தான். கம்பனி மானேஜர் அவனை வெளியே அனுப்பி நிலுவை வசூல் பண்ணிவரும்படி ஏவினர். அவ்வண்ணம் அவன் சென்று கொஞ்ச நேரமானதும் டெலபோனில் யாரோ கூப்பிட அவர் குழாயை எடுத்துக்காதில் வைத்தார்.

கூப்பிட்டவர்:—ஐயா தங்கள் கம்பெனியில் சுருண்ட தலைமயிரும் இருண்ட நிறமுமுடைய ஒரு வாலிபன் வேலைக்கிருக்கிறானா?

மானேஜர்:—ஆம், என்ன சங்கதி?

கூப்பிட்டவர்:—என்னிடம் அவன் பணம் கேட்க வந்தான். நான் பக்கத்துக்கதவு வழியாகவரச்சொன்னேன்; அவன் கேட்கவில்லை, ஆகவே கோபம் கொண்டு நான் துப்பாக்கியை எடுக்க நேர்ந்தது.

மானேஜர்:—அடா, பாவி! சுட்டுவிட்டீரோ?

கூப்பிட்டவர்:—இல்லை. என்து பாக்கியைத்திருப்பிக்கொடுக்கச்சொல்லுங்கள்.

0 0 0

ஆசிரியர்:—பல்லில்லாத ஒரு பிராணியின் பெயர் சொல்.

மாணவன்:—என்பாட்டி சார்.



# சொர்ன வல்லி.

(கூழைரங்கன் இரண்டாம் பாகம்.)

## எட்டாம் அத்தியாயம்.

### கல்யாண ஏற்பாடு.

மாணிக்கமும் நாகப்பனும் கட்டித்தழுவி மெய்மறந்து நிற்பதை யாவரும் கண்டு ஒன்றும் தோன்றாமல் திகைத்து நின்றனர். வரதாஜபிள்ளை ஓடி மாணிக்கம் மாணிக்கம் உத்தமத் தெய்வமே எங்கேயப்பா சென்றிருந்தாய் என்று ஒன்று பட்டிருக்கும் இருவருடன் மூன்றுவது உருவமாகப் பிடித்துக் கட்டிக்கொண்டு ஆனந்தக் கண்ணீரால் அவர்களைக் குளிப்பாட்டி விட்டார். மூவரும் சில நிமிஷங்கட்கப்புறம் தன் நிலை பெற்றுப் பிரிந்து தனித்தனி உட்கார்ந்தனர். என்றாலும் ஒருவரை யொருவர் பார்த்த வண்ணமாகச் சிரித்துக்கொண்டேயிருந்தனர்.

**வரதராஜப் பிள்ளை:**— மாணிக்கம்! மவுங்மியாவிலிருந்து எங்கே சென்றாய்? எப்படிச் சன்யாசியானுய்? உன் கடிதத்தைக் கண்டு இறந்து போனுயென்று நினைத்தோமே!

**நாகப்பன்:**—மாணிக்கண்ணே!நல்ல வேளை. சாகாமல் சாமியாராகப் போனீர்களே!

**மாணிக்கம்:**—நாகப்பா! நீ எப்படியடா சாமியாரானுய்? உன் பெண்டாட்டி யெங்கே? வீட்டை விட்டுக் கிளம்பி எவ்வளவு நாளாயிற்று?

இந்த மாதிரி ஒருவரை யொருவர் கேள்வி கேட்டார்களே யன்றித் தங்கள் தங்கள் கதையைச் சொன்னார்களில்லை, மூவரும் திறையைக் கள்ளுண்டவர்களைப் போல் சிரிப்பதும் மகிழ்ச்சியடைவதும் மற்றவர் சொல்வதை வாங்காமல் தாங்களே கேள்வி கேட்டுக் கொண்டிருப்பதுமாக இருந்தார்கள். மாலை 5 மணிக்கு வீரப்பனும் சுப்பிரமணியனும் வந்தார்கள். வந்ததும் சாமியார்களை விழுந்து வணங்கியெழுந்து பக்கத்தில் அடக்க ஒடுக்கமாக உட்கார்ந்தார்கள்.

**அருளானந்தபிக்ஷு:**— தம்பி! எப்பொழுது ஊருக்குப் போகிறீர்கள்?

**வீரப்பன்:**—நாளை மெயிலில் போகிறோம்.

**அருளானந்தபிக்ஷு:**—உங்கள் ஊர் எது?

**வீரப்பன்:**—எனக்கு ஊர் தேவகோட்டை. சுப்பிரமணியனுக்கு ஊர் ஆலங்குடி.

**அருளானந்தபிக்ஷு:**— உனக்குக் கல்யாணமாகிவிட்டதா?

**வீரப்பன்:**—ஆம். சுப்பிரமணியன் விதவா விவாகம் செய்து கொள்ளப் போகிறான்.

**அருளானந்தபிக்ஷு:**—தம்பி,நீ விதவா விவாகம் செய்து கொள்ள முடியுமா?உன் தகப்பனுர் தாயார்சுற்றத்தார் விடுவார்களா?

**சுப்பிரமணியன்:**— எங்கள் குடும்பத்தில் கல்யாணத்துக்கு இனி வழியில்லை. அண்ணன் மனைவி இறந்து போனாள். அவருக்கே வழியில்லை. எனக்கு எங்கே போகிறது.

**அருளானந்தபிக்ஷு:**— நீசொல்வது வாஸ்தவம். உன்னை சுவீகாரம் விட்டு விடுவார்கள்.

**சுப்பிரமணியன்:**—என் தாயார்விடமாட்டாள்.

**அருளானந்த பிக்ஷு:**—சரி. போய் வாருங்கள்.

**வீரப்பன்:**—சுவாமிகள் இன்னும் எவ்வளவு நாளைக்கு இங்கேயிருக்கும்? அட்ரஸ் தரமுடியுமா?

**அருளானந்தபிக்ஷு:**—இன்னும் சில நாள் இங்கேயிருப்போம். கடிதம் எழுதுவதானுல் இவிடத்துக்கே எழுதுங்கள்.

வீரப்பனும் சுப்பிரமணியனும் விடை பெற்றுச் சென்றார்கள். இருவருக்கும் பெரும் சந்தேகமுண்டாகி விட்டது. கப்பலில் தமிழ் பேசாத சாமியார்இங்கே நன்றாகத் தமிழ்பேசுகிறாரே. இதில் என்னமோ ரகசியமிருக்கிறதென்று பேசிக் கொண்டு சென்றார்கள்.

வரதராஜபிள்ளை கொடுத்த தந்தி செல்வராஜபுரத்திற்கு வந்தது! சோமசுந்தரம் வீட்டுக்குத் தந்தி கொண்டு சென்ற பியூன் மகாகவிப் புலவர் கையில் கொடுத்தான். தந்தியைப் பிரித்துக் கொண்டிருந்தார் புலவர். ஆலங்குடியிலிருந்து வந்த சோமசுந்தரம் வண்டியிலிருந்து குதித்து சங்கத்துக்குள் நுழைந்தான். "மாணிக்கம்சென்னையில்" என்று சொல்லிக் கொண்டு குதித்தான். மகாகவிப்புலவர் தந்தியைக் கீழே போட்டு விட்டு "நம்மள் மாணிக்கமா? சென்னையிலா? ஆகா என்ன கடவுளருள்?" என்றார்.

**புலவர்:**—எப்பொழுது வந்தான் எங்கிருந்து வந்தான்?நமக்குச் செய்தி வரவில்லையே?

**சோமசுந்தரம்:**— ஆலங்குடிப் பையன்சுப்பிரமணியன்அதேகப்பலில் வந்தானும். மாணிக்கம்புத்தசன்னியாசியாகி சென்னைக்கு வந்திருப்பதாகவும் வரதராஜபிள்ளை வேதாந்தமடத்தில் இருப்பதாகவும் சொன்னுன்.

**புலவர்:**—நம்மள் மாணிக்கந்தான் என்பதெப்படித் தெரிகிறது. கப்பலில் தமிழே பேசவில்லையாம். சென்னையில் கண்டபோது தமிழே பேசினதைப் பார்த்து ஆச்சர்யப்பட்டார்களாம். பின்னர் அவர்களுடன் வந்த சாமியாரொருவர் போட்மெயிலில் கொழும்புக்குச் சென்றாராம். அவர் சுப்பிரமணியனிடம் "மாணிக்கம் என்ற நாட்டுக் கோட்டை வாலிபர் எங்களுடன் புத்தசன்யாசியாகி விட்டார். அவரோடு நீங்கள் வந்து பேசிக் கொண்டிருந்தீர்களே என்று கேட்டாராம். நம்மள் மாணிக்கந்தான், சந்தேகமே யில்லை. ஒரு தந்தி கொடுப்போம்.

"வரதராஜபிள்ளை வேதாந்த மடம், மைலாப்பூர் (சென்னை). இவ்வூர்மாணிக்கம் செட்டியார் புத்தசன்யாசிகளுடன் இங்கு வந்திருப்பதாக அறிகிறோம். இருக்கிற விபரத்திற்குபதில்" என்று தந்திபாரத்தில் எழுதிக் கொண்டு போய் தந்தியாபீஸில் கொடுத்து பதில் கட்டவேண்டுமென்று சோமசுந்தரம் கூறினுன். தந்திரைட்டர் "இதற்கு பதில் தந்தி ஏற்கெனவே வந்துவிட்டதே" என்றார். தந்தி கொடுக்கு முன் பதில் வருமா? என்றான் சோமசுந்தரம் "தந்தி கொடுக்கு முன் பதில்வந்து விட்டது. நான் தானே காலையில் அனுப்பினேன்." என்றார் தந்தி ரைட்டர். சோமசுந்தரம் திரும்பினுன். வரும் வழியில் புலவர் தந்தியும் கையுமாக எதிர்ப்பட்டார். "நீங்கள் வந்த அவசரத்திலும் செய்தி கிடைத்த ஆனந்தத்திலேயும் கையிலிருந்த தந்தியைக் கீழே போட்டு மறந்தேபோனேன். நம்மள் மாணிக்கம் வரதராஜபிள்ளைமடத்தில் சுகமாக இருப்பதாகவும் நம்மை உடனே வரும்படியும் வரதராஜபிள்ளை தந்தி கொடுத்திருக்கிறார்" என்றார் புலவர். அண்ணுமலை, சோமசுந்தரம், புலவர் ஆகிய மூவரும் புறப்பட்டார்கள். மூன்றும் நாள் சென்னை சேர்ந்தனர். இரண்டு ரூபாய்க்குப் பழமும் ஒரு ரூபாய்க்கு மிட்டாய் கற்கண்டும் வாங்கிக் கொண்டு மைலாப்பூருக்குச் சென்றனர்.

வரதராஜபிள்ளை வேதாந்த மடத்தில் வரதராஜபிள்ளையும் மாணிக்கமும் இன்னும் சிலசன்யாசிகளு மிருந்தார்கள். கொண்டுபோன பழம் முதலியவற்றை வைத்து இவர்கள் மூவரும் கும்பிட்டனர். அவர்களும் திரும்பக் கும்பிட்டனர்.

**மாணிக்கம்:**—(புலவரைப் பார்த்து) வெகு நாளாகி விட்டது. இருக்குமிடத்தைக் கூடத் தெரிவிக்காமற் போய் விட்டேன். நீங்கள் என்னைமன்னிக்க வேண்டும். சோமசுந்தரத்துக்குக் கல்யாணம் ஆகிவிட்டதா?

**சோமசுந்தரம்:**—இல்லை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

**மாணிக்கம்:**—(சிரித்துக் கொண்டு) சரி இங்கே ஒரு சிங்கம் அடைபட்டுக் கிடக்கிறது; தெரியுமா?

**சோமசுந்தரம்:**— எந்தச் சிங்கம்? எங்கே அடைபட்டிருக்கிறது? வெளியில் வராதோ?

**மாணிக்கம்:**—வரும். தவசிப்பிள்ளை! தாடிச் சாமியாரைக் கூப்பிடு

சடையும் முடியும் பெரிய மீசையும் தாடியுமாக ஒரு வாலிப சன்யாசி காவி வேட்டியும் மேலங்கியும் அணிந்தவராக வந்தார்.

**மாணிக்கம்:**—இவரை முன் எங்கேயாவது பார்த்ததுண்டா?

**புலவர்:**—சொர்க்கலோகத்தில் பார்த்த ஞாபக மிருக்கிறது. காவிரியில் கலந்த மகானுபாவனு?

**சோமசுந்தரம்:**—நாகப்பன் கஷ்டம் பொறுக்க முடியாமல் இப்படியாக நேர்ந்தது. என்னஜாதி! என்ன ஜனங்கள்! இவ்வளவு பெரிய அறிவாளி! சிறந்தசீர்திருத்தக்காரன் பரிசுத்தமான உள்ளமுடையவன் கடைசியில்என்னஆயிற்று?இதைநினைத்தால் இறப்பதே மேலென்ற தோன்றுகிறது. இந்தக் கோலத்துடனுவது பார்க்கக் கிடைத்ததே.

**நாகப்ப சுவாமிகள்:**—மாணிக்கத்தை மீண்டும் காணும்படியான பாக்கியம் கிடைத்ததே. இப்படி யெல்லாரும் சந்திப்போ மென்று ஒருவரும் நினைக்க வில்லை.

அண்ணுமலை மாணிக்கத்தின் கதையையும் நாகப்பனும் இங்கு சந்தித்த விதத்தையும் தெரிந்து கொள்ளப் பேராசைப்பட்டான். ஸ்நானம் செய்து பகற்போஜனம் செய்தனர். ஆளுக்கொரு மான்தோல் போடப்பட்டது. உட்கார்ந்தார்கள். பெரிய ஆலமர நிழல்; ஜிலு ஜிலுவென்று காற்று வீசியது. மாணிக்கம் கதையை ஆரம்பித்தார்.

மவுங்மியாவில் காத்தான் செட்டியாரிடம் இருந்தேன். பழய காலத்து மனிதனுதலால் சிறிது சிரமமாகவே யிருந்தது. ஒரு நாள் ரூல் தடியால் மண்டையிலடித்தார். அன்று இந்த வரதராஜபிள்ளையும் உடனிருந்தார். அன்றிருந்து என்னிடம் வெகு மதிப்பு வைத்து நடந்து கொண்டார். சில நாள் சென்றதும் சமையற்கார சின்னக்கறுப்பன் வந்தான். இரவு சாப்பாட்டிற்கு மேல் அவனை யழைத்துக் கொண்டு போய் ஊர்ச் செய்தியை விசாரித்தேன். கூழைரங்கனுக்கு மறுதாரமாக சொர்னவல்லியைக் கட்டிவிட்டார்கள் என்றான். இரவெல்லாம் தூக்கம்பிடிக்க வில்லை. 4 மணிக்கு ரயில்வே ஸ்டேஷனில் மணியடித்த சப்தம் கேட்டது. எழுந்தேன். மெதுவாகச் சென்று பெட்டியைத்திறந்து 100 ரூபாயை எடுத்துக்கொண்டு நகைகளைக் கழற்றி வைத்துவிட்டு ஸ்டேஷனுக்குச் சென்றேன். வண்டிபுறப்படும் நேரம் டிக்கெட் வாங்க முடியவில்லை. ஸ்டேஷன் மாஸ்டரிடம் சொல்லிவிட்டு வண்டியில் ஏறினேன். வண்டியும் உடனே புறப்பட்டது. ரங்கூனுக்குப் போனதும் என்ன செய்வதென்று யோசித்தேன். என்ன யோசித்தும் முதலில் செய்த முடிவுதான் கிடைத்தது. இறப்பதென்ற முடிவு உறுதிப்பட்டது. எப்படி இறக்கிறது? இதனுல் ஒருவருக்கும் கஷ்டம் நேரக்கூடாது. ஆதலால்தான் மவுங்மியாவிலிருந்து புறப்பட்டேன். நேரே கப்பலடிக்குப் போனேன். எந்தக் கப்பல் உடனே புறப்படுகிற தென்று கேட்டேன். ஹாங்காங் செல்கிற கப்பல் தயாராக இருப்ப தறிந்தேன். வெகு பிரயாசைப்பட்டு டிக்கெட் வாங்கிக் கப்பலில் ஏறினேன். கப்பல் மாலை 4-30 க்குப் புறப்பட்டது. நடுக்கடலில் இரவில் குதிப்ப தென்று திட்டமாக முடிவு செய்துவிட்டேன். கப்பலில் சீனர்களும் பர்மாக்காரரும் அதிகமாக இருந்தனர். இரண்டாம் வகுப்பில் ஒரு பர்மாக்காரப் பையன் பிரயாணம் செய்தான். இவ்வளவு பேரும் அந்தப் பையனைப்பற்றியே பேசிக் கொண்டிருந்தனர். காரண மென்ன வென்றால் அவனுடைய தகப்பன் பெரிய பணக்காரர். அவரும் அவர் மனைவியும் முதலாவது பிறக்கிற குழந்தையை புத்த பிக்ஷுவாக மடத்துக்கு விட்டுவிடுகிறோமென்று பிரார்த்தனை செய்து கொண்டார்களாம். அதன்படி அப்பையனை வளர்த்து மடத்துக்கு விட்டுவிட்டார்கள். இப்பொழுது அப்பையன் படிப்பதற்காக ஷங்காய்க்குச் செல்கிறான். நானும் அப்பையனைப் பார்க்கச் சென்றேன். 14 வயது. மொழுமொழுவென்று வளர்ந்திருந்தான். அழகும் அன்பும் கண்டாரை வசியப்படுத்தின. பருத்த கண்கள் சுவாமி விவேகானந்தரின் சகோதரனென்று நினைக்கும்படி யிருந்தது. சிரித்த முகமும் செவ்விள வாயும் களங்கமற்ற தோற்றமும் கண்டவர்களைக் காந்தம் போல் இழுத்தன. நான் சென்று பர்மாவில் பேசினேன். அன்பாகப் பேசினுர். அவர் உலக யோகத்தில் பற்றில்லாத-அடிபடாத சன்யாசி-நானே உலக வாழ்வில் செவ்வையாக அடிபட்டு வெறுத்து இறப்பதற்குத் தயாராக இருக்கும் மஹா பெரிய சன்யாசி. நீண்ட நேரம் உலக ஜனங்களுடைய கஷ்டங்களையும் கௌதம புத்தர் அக்கஷ்டங்களை நிவர்த்திக்கப்பட்ட பாட்டினையும ஒழுக்கங்களையும் புத்த மத தர்மங்களையும் பற்றி நீண்ட நேரம் பேசினோம். இளம் பிக்ஷு என்னிடம் மிக்க நேசமுற்றார். நான் யார் எங்கே செல்கிறே னென்பவற்றைப்பற்றி அறியலாமா என்றார். எனக்கு வெட்கம் ஒரு புறம். கடலில் குதிக்கப்போகிறேன் என்று அவரிடம் சொல்ல உண்மையிலே என் மனம் நாணமடைந்தது. பரிசுத்தமான பால்ய சன்யாச

(14-ம் பக்கம் பார்க்க)

# சினிமாப்பகுதி.

## சினிமாப்படமும்............
## ............கல்வி யபிவிருத்தியும்.

இக்காலத்தில் சினிமாக்கொட்டகைக்கு செல்லாதவர்களில்லை. ஒருதடவை யொருவன் ஒரு படத்தைப் பார்த்துவிட்டால், மேலும் மேலும் கொட்டகையை அணுகவேண்டு மென்ற ஆசையை எய்துகின்றான். இதற்கான காரணம் சினிமாப் படம் அவனுடைய மனதைக் கவர்ந்துவிடுகின்றதென்பதாகும். உண்மையாகவே படம் இயங்கிக் கொண்டிருப்பதும், ஒரு நிகழ்ச்சியை நடந்தவாறு காட்டுவதும் அவனுக்கு ஆச்சரியத்தைக் கொடுத்து அவன் மனதை கவர்கின்றன. மேலும் திறமை வாய்ந்த நடிகர்கள் படத்தில் தோன்றுவதால் பார்ப்பதற்கும் குதூகலமுண்டாகின்றது. இத்தகைய மனதை இழுக்கும் சினிமாவை மனிதனுக்குக் கல்வி (அறிவு) புகட்டுவதில் உபயோகித்தால் எவ்வளவு பிரயோசனகரமாயிருக்கும்.

காகிதம் செய்யும் முறையை ஆயிரம் தரம் ஒருவனுக்கு எடுத்துக் கூறிக்கூறி மண்டையை உடைப்பதைவிட அவன் நேரிலேயே காகிதம் செய்யும் பற்பல முறைகளை சினிமாவில் கண்டானென்றால் ஆயுளுள்ளளவும் மறப்பானோ? அன்றி அவனுக்கு அம்முறையை தெரிந்துகொள்வதில் வருத்தமேனு முண்டா? பக்கம் பக்கமாகத் திருப்பிப் பல புத்தகங்களைப் பல வருடங்களில் படிக்க வேண்டியதை, மிகுந்த மனக்களிப்போடு சில மணிநேரங்கட்குள் படித்துவிடலாமன்றோ? இங்ஙனமாயின் மனிதனுக்கு சுருங்கிய நேரத்தில்—அதாவது சில வருடங்கட்குள்—எத்தனை சாஸ்திரங்களைக் கற்றுவிட முடியும்?

கொக்கிப் புழு இன்னமாதிரி யுண்டாகின்றது, இன்னமாதிரி பரவுகிறது, இன்னமாதிரி வயிற்றில் தொக்கி இன்னமாதிரி நோயை யுண்டுபண்ணுகிறது என்று சாதாரண அறிவுடைத்தவனுக்கு எத்தனை நாள் கூறினும் நன்கு புரியாது. அத்தகைய ஒருவனிடம் அமெரிக்கக் கம்பனியார் தயாரித்த கொக்கிப் புழுப்படத்தைக் காண்பித்தால் எவ்வளவு எளிதில் தெரிந்து கொள்கிறான்! இங்ஙனமே சினிமாப்படத்தால் வயது முதிர்ந்தவரும், குழந்தைகளும் மாணவர்களும் தெரிந்து கொள்ளக்கூடிய விஷயங்களெத்தனையோ வல்லவா? நம் மாணவர்கள் சில நாட்களுக்குள் கற்றுக் கொள்ளக்கூடிய எத்தனையோ விஷயங்களை, ஒருவருடத்தில் 365 நாட்களில் வாத்தியாரின் அடிதடியால் அழுத கண்ணோடும் குழம்பிய புத்தியோடும் படிக்கின்றார்களென்றால் ஏனோ நம் பள்ளிக் கூடங்களில் சினிமாப் படம் மூலம் பாடங்களைக் கற்பிக்கலாகாது? அங்ஙனமாயின் பாழாக மாணவர் செலவிடும் சமயத்தில் எவ்வளவு பெரும் பகுதியை மற்ற பிரயோஜனகரமான வேலையில் செலவிடலாம்! பர்மிங்காம் தொழிற் சாலையை ஒருஆசிரியர்—தமக்கு தெரியாதிருந்தும்கூட—புத்தகத்தில் படித்த அறிவைக் கொண்டு (வயிற்றுப் பிழைப்பொன்றே குறிக்கோளாகக் கொண்டு) பல மாதங்கள் வகுப்பில் படிப்பிக்கிறார். ஆனால்பர்மிங்காம் தொழிற் சாலையின் ஒரு சினிமாப் படம் அத்தொழிற் சாலையை உள்ளபடியே மலைமேல் விளக்குப் போல் சில மணி நேரத்துக்குள் காண்பித்து விடுகின்றது.

புத்தரின் சரித்திரம் சில வாரங்கள் கற்பிக்கப்படுகின்றன. மாணவர்களும் தெரிந்தது பாதி தெரியாதது பாதியாக வெளியேறுகின்றார்கள். அதோடு அவர்கள் புத்தர் சரித்திரத்திற்காக செலவிடும் நேரம் முழுதும் வெப்பிலை காயே. இந்த நிலைமையில் சினிமாப் படத்தால் புத்தர் சரித்திரம் விளக்கப் பெறுவதாயின் மாணவர்களின் எவ்வளவு தொல்லை லாபகரமாகும்? எவ்வளவு நாள் மீதப்படும்?

இத்தகைய வசதிகளை யோர்ந்து டெனூட்டார் பள்ளிக் கூடங்கட்கு சினிமாப் படங்களை உபயோகிக்கும் முறையைக் கையாண்டு வருகிறார்கள். வைத்திய விலாகாதாரும் சுகாதாரப் பிரசாரத்துக்காக மூலைக்குமூலை கிராமங்களுக்குக் கிராமம் சினிமாப் படத்தையே கொண்டு போகிறார்கள்.

சோவியத் ருஷியாவில் மாணவர்களின் பாடங்களில் பாதிக்கு மேல் சினிமாப்படங்களாலேயே கற்பிக்கப் படுகின்றதாம். அம்முறையை நேரில் பார்த்தோர் பக்கம் பக்கமாக அதனை வியந்தெழுதுகிறார்கள். ஒருவர் வருடம் நூறு ஆசிரியர்களால் கற்பிக்கப் பெறுவதைவிட விசேஷமாக ஒருமணி நேரத்தில் ஒரு சினிமாப்படம் கற்பித்து விடுகின்றது என்கின்றார்.

இம்முறையை அரசாங்கத்தார் நம் பாடசாலைகளில் கையாட வேண்டும். அதனால் அறிவுவிருத்தி, சமயலாபம், தொல்லைக்குறைவு, சிறுவரின் மூளைக் குழப்பமின்மை யாதியன சித்திக்கும் அதோடு பொது மக்கட்கும் காண்பிப்பதாயின்-பாமரர்களும்கூட பற்பலகலைகளின் நிகழ்ச்சிகளின், தத்துவங்களின், இயக்கங்களின் நுட்பத்தை அறிந்து கொள்ள இடமேற்படும். அதனால் நாட்டில் அறிவுமல்கக்கூடும். சில சினிமாப்படங்கள் காங்கிரஸ் சம்பந்தமான பிரசாரத்தை மறைமுகமாக செய்து விடுகின்றதென்று அவற்றிற்குத் தடையேற்படுத்திய அரசாங்கத்தார், அறிவைப் புகட்டுகின்ற சினிமப்படங்களை பொதுமக்கட்கும் மாணவர்கட்கும் காண்பிக்கும்படி ஏற்பாடு செய்ய வேண்டுவது கடமையாம்.

எஸ். ஸி.

## ஆசிரியர் சொற்பொழிவு.

டிசம்பர் 29ந் தேதி சென்னை சினிமாப் பட சங்கத்தின் ஆதரவில் பிராட்வே சி. எம். எஸ். ஹாலில் ஒரு பொதுக் கூட்டம் நடைபெற்றது. அப்போது கிறிஸ்தியன் காலேஜ் ஹைஸ்கூல் தலைமையாசிரியராகிய திரு. கெ. ஜாகப் என்பவர் ''சினிமா படத்தின் கல்வித்திறம்'' என்னும்பொருள் பற்றிப் பேசினார். அவர் பற்பலவாறு சினிமாப் படம் ஊட்டும் அறிவைப் பற்றிக் கூறிவிட்டு, நம்நாட்டுப் பாடசாலைகளில் சினிமாவும் அங்கம் பெற்றிருக்க வேண்டுமென்று கூறினார். அதோடு படச் சங்கத்தாரை, படம் தயாரிப்பவர்களிடம் உண்மையான கல்வி யறிவைப் புகட்டும் படங்களைத் தயாரிக்கும்படி வேண்டிக்கொள்ள தீர்மான மியற்றும்படியும் கேட்டுக்கொண்டார்.

## சினிமாப் படத்திற்குத் தடை.

'யுத்தத் தாய்மார்கள்' என்ற சினிமா படம் பம்பாய் சினிமா போர்டாரால் அனுமதிக்கப்பட்டிருப்பினும், பாஞ்சாலக் கவர்ன்மெண்டார் இதைப் பாஞ்சாலம் முழுதும் தடுத்து விட்டிருக்கின்றார்கள்.

## 60 ஆயிரம் அழகிகளுக்குள் தேர்தல்.

அமெரிக்காவில் 'சிறுத்தைப் பெண்' என்ற ஒரு சினிமாப்படம் பிடிக்கப்பட்டு வருகின்றது. அதற்கு அழகான ஓர் பெண் தேவையாம். ஆகவே பல அழகிகளைத் தருவித்துத் தேர்தல் நடத்தினார்கள். சுமார் 60 ஆயிரம் பேரை பரிசோதித்ததில் ஒரு பெண் தகுதியுடையவளாகக் காணப்பட்டாள். இவளுடைய பெயர் ஸ்ரீமதி காதலின் பார்க் என்பது. அவளது அழகும் நடனமும் எவரையும் பிரமிக்கச் செய்கின்றனவாம்.

## ஹாஸ்ய நடிகர் ஹெரால்டு லாயட்.

அமெரிக்காவில் இருந்து வரும் பிரபல ஹாஸ்ய நடிகராகிய ஹெரால்டு லாயட் என்பவரும் அவரது சகோதரர் லேலார்டு லாயட் என்பவரும் இங்கிலாந்திலுள்ள பிலைத் என்ற இடத்துக்கு வந்திருக்கின்றார்கள். இவர்களுடைய நோக்கம் தம் பிறப்பிடமாகிய அவ்வூரில் தம பந்துக்கள் யாரேனும் இருக்கின்றார்களா வென்று கண்டு பிடிப்பதாகும். இருவரும் பல வருடங்கட்கு முன்னமேயே அமெரிக்காவிற்குப் போய்விட்டார்கள்.

## நிர்வாணமாய் நடிக்க.

ஹாலிவுட் பிலிம் கம்பனிகளிலேற்படும் தகராறுகளைத் தீர்த்து வைப்பதற்காக நியமிக்கப்பட்டிருக்கும் நீதிமன்றத்தில் ரிடா-லீ-ராய் என்ற மாது ஒருவழக்குத் தொடுத்திருக்கிறாள். அவ்வழக்கில் ''அவளுடைய காட்டுமிராண்டியை அழை'' என்ற சரித்திரத்திற்காக ஒரு பிலிம் கம்பனியார் அவளை நிர்வாணமாய் நடிக்கும்படித் தூண்டியதாகக் கூறப்பட்டிருக்கின்றது.

ஆனால் அவள் [illegible] செய்யவில்லையாம்.

## விரல்கள் இன்ஷூர் செய்யப்பட்டன

பிரபல சினிமாநடிகரும் உலகில் எடுப்பு மிணையுமற்ற வயோலின் நிபுணரும் (பிடில் வித்வான்) ஆகிய கூபலிக் என்பவர் தமமுடைய கைவிரல்களை 26000 பவுனுக்கு இன்ஷூர் செய்திருக்கிறார். அவ் விரல்களினுதவி யில்லையானால் ஒரு பாட்டாவது அவரால் வாசிக்க முடியாது. அவர் ஒவ்வொரு விரலுக்கும் வைத்திருக்கும் விலை அடியில் வருமாறு.—

இடக்காத்தில் முதல் மூன்று விரல்கள் 7200 பவுன்; சிறு விரல் 2200 பவுன்; பெருவிரல் 7500 பவுன். வலக்காத்தில் முதல் மூன்று விரல்கள் 6900, சிறுவிரல் சிறுவிரல் 470 பவுன்; பெருவிரல் 900 பவுன்.

## நடிகர்கட்குள் வேலையில்லாத் திண்டாட்டம்.

ந்யூயார்க்கில் எல்லா தொழில்களும் படுத்துவிட்டது போலவே நடிகர் தொழிலும் படுத்துப் போயிற்று. ந்யூயார்க்கில் மட்டிலும் 4000 ஆக்டர்கள் (ஆண்களும் பெண்களும்) வேலையின்றித் தவிக்கின்றார்கள். அவர்கள் தடைபடாமல் தொழில் நடத்தப் பல முறைகளைக் கையாடிப்பார்த்தார்கள். எல்லாம் தோல்வியடைந்து விட்டன.

## சினிமாவில் டிராட்ஸ்கி

போல்ஷவிக் ருஷியாவிலிருந்து துரத்தப்பட்ட லியோன் டிராட்ஸ்கி கோபன்ஹேகன் பட்டணத்தில் ஒரு அமெரிக்கன் சினிமாபடக் கம்பனியாரோடு ஒரு உடன்படிக்கை செய்திருக்கிறார். அதன்படி அவர் டென்மார்க்கை யடைந்ததும் சினிமாவுக்காகப் பிரசங்கம் செய்வார். அதற்குப் பதிலாக அவருக்கு 1600 பவுன் கொடுக்கப்படும்.





# மகாத்மா உபவாசம்.

## நாள் குறிப்பிடாது ஒத்திவைக்கப்பட்டது.

## அதுபற்றி கூறப்படும் விவரம்.

மகாத்மா ஏற்கெனவே கூறியபடி 2-ந் தேதி பட்டினியிருக்கவில்லை. அதற்கு அவர் கூறும் விவரமாவது:—

### தலைவர்களுடன் ஆலோசனை.

என்னுடன் கலந்து பேச பூனாவுக்கு வந்த ஸ்ரீமான்கள் ராஜகோபாலாசாரியர், மாதவன்நாயர், கேளப்பன் ஆகிய தலைவர்களுடன் தீர்க்கமாய் நான் ஆலோசித்தேன். குருவாயூர் பொதுஜன வாக்கின் தீர்ப்பை என் முன் அவர்கள் ஆஜர் செய்தார்கள். குருவாயூர் கோயிலிருக்கும் பொன்னனித்தாலூகாவில் பொதுஜன வாக்கெடுக்கப்பட்டது. இதற்கு முன்னால் இவ்வளவு குற்றமற்ற ஜாக்கிரதையுடனும் சத்தியமாகவும் வேறெதுவும் எடுக்கப்படவில்லை. 100-க்கு 71-வீதம் வாக்களித்தவர்களை நான் இதுவரையில் கண்டதில்லை.

### கோயிலுக்குப் போகிறவர்கள்.

ஹரிஜன ஆலய அனுமதிக்குப் பொதுஜன ஆதரவு இருக்கிறதா, இல்லையா என்ற உண்மையைக் கண்டறிவதற்காக கோயிலுக்குப் போகிறவர்களின் வாக்குகள் மாத்திரமே பதிவு செய்யப்பட்டன. அதாவது குருவாயூர் ஆலயத்திற்குள் பிரவேசிக்க அனுமதி பெறுதவர்களும் ஆர்ய சமாஜிகளைப் போல் கோயிலுக்குள் வாாதவர்களும் வாக்களிப்பதில் சேர்க்கப்படவில்லை. கோயிலுக்குள் போகிறவர்கள் யார் என்பதைக் கண்டறிய முயற்சிக்க வேண்டுமென்று, இதன் கஷ்டங்களை ஆலோசிக்காமல், நான் முன்னால் கூறினேன்.

ஆனால் இதை நிர்ணயிப்பது அசாத்தியமானதென்று இப்பொழுது விளங்குகிறது. ஆகவே ஹிந்து மதத்தில் கோயிலுக்குப் போவது முக்கியமானதென்று நம்புகிறவர்களும் ஆலயஅனுமதி பெற்றிருப்பவர்களும், கோயில் பூஜையில் நம்பிக்கை யுடையவர்களும் வாக்களித்தால் போதும் என்று அறிவிக்கப்பட்டது.

### வாக்குகளின் விவரம்.

குருவாயூர் கோயிலுக்குள் போகும் உரிமை யுடையவர்களின் மொத்த ஜனத்தொகை சற்றேறக் குறைய 65,000. இதில் வயது வந்தவர்களின் தொகை 30,000 என்று மத்தியஸ்தர்கள் கணக்கிட்டிருக்கிறார்கள். இதில் 27,465 பேரிடம் வாக்களிக்கும்படி தொண்டர்கள் போய்க் கேட்டிருக்கிறார்கள். 100க்கு 56 வீதம் அனுமதிக்குச் சாதகமாகவும், 9 பாதகமாகவும், 8 நடுநிலைமை வகித்தும் வாக்களிக்க மீதியிருக்கும் 27-பேர் இதில் கலந்து கொள்ள மறுத்துவிட்டனர். விரோதமான சந்தர்ப்பங்களில் இந்த வாக்கு எடுக்கப்பட்டிருக்கிறது என்பதையும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். ஜாமொரின் ஒத்துழைக்க மறுத்ததோடு, இதில் ஈடுபட்டுழைக்கும் தொண்டர்களையும் அனுஷ்டிக்கப்பட்ட முறைகளையும் குறை கூறினர் என்று சொல்லவேண்டியிருப்பதற்கு நான் வருந்துகிறேன். வைதிகரின் கோட்டையாக பொன்னனி தாலூகா விளங்குகிறது; எனினும் இந்தியா முழுவதும் பிரசித்தமாக்கப்பட்ட இந்தக் கோயிலில், நிஷ்கரிஷையான பெரும்பான்மை வாக்குகள் ஆலய அனுமதி ஹரிஜனங்களுக்கு அளிக்கவேண்டுமென்று தீர்ப்பளித்திருக்கின்றன. நான் உண்ணாவிரதம் அனுஷ்டிக்க விருந்ததைத் தெரிந்து கொண்டிருந்தும், ஆண்களும் பெண்களும் ஆலய அனுமதிக்கு விரோதமாய் வாக்களிக்கத் தயங்கவில்லை என்கிற செய்தி அறிவுறுத்தக்கூடியதாயிருக்கிறது. அந்நிலைமை வகித்தவர்கள் ஒத்துழைக்க மறுத்தவர்களின் எண்ணிக்கையிலிருந்து நியாயமான ஒரு முடிவுக்கு வரலாம். அவர்கள் வாக்களிக்கத் தீர்மானித்திருந்தால், அவர்கள் எல்லாரும் ஹரிஜன ஆலய அனுமதிக்கு விரோதமாய் வாக்களிக்கமாட்டார்கள். இவர்களில் நான்கில் ஒரு பாகஸ்தினராவது சாதகமாக வாக்களித்திருப்பார்கள் என்று ஊகிப்பதை பொருத்தமற்றதாகவோ, நியாயமற்றதென்றோ சொல்லிவிட முடியாது. இதையும் சேர்த்துப் பார்த்தால் யோக்கியதையுடைய மொத்த வாக்காளர்களில் 100-க்கு 65 வீதம் அனுமதிக்கு ஆதரவு கொடுத்திருக்கிறார்கள். இவர்களின் எண்ணிக்கையை அறவே விலக்கிப் பார்த்தால், 100க்கு 77 வீதம் ஆலய அனுமதிக்குச் சாதகமாக இருக்கிறார்கள். புள்ளி விவரங்களை நாம் எப்படிப் புரட்டிப் புரட்டிப் பார்த்தாலும், ஆலய உரிமை கொண்டவர்களில் மிகப் பெரும்பான்மையோர் ஹரிஜன அனுமதியை ஆதரிக்கிறார்கள் என்பதை யாவராலும் மறுக்கமுடியாது என்னும் முடிவுக்கே வருகிறோம். குருவாயூர் பிரதேசத்திலுள்ள ஜனங்கள் ஹரிஜன ஆலய அனுமதிக்குச் சாதகமாயிருக்கிறார்கள் என்று ஸ்ரீ கேளப்பன் கூறியது முற்றிலும் உண்மை என்பதை இது மெய்ப்பிக்கிறது.

### சர்க்காரின் அறிக்கை.

சென்னைச் சட்டசபையில் டாக்டர் சுப்பராயன் கொண்டுவரவிருக்கும் ஹரிஜன ஆலய அனுமதி மசோதாவுக்கு வைஸிராய் அனுமதி கொடுக்கும் விஷயம் ஜனவரி 15-ந் தேதிக்கு முன்னால் தெரியாது என்று சர்க்கார் அறிக்கையை வெளியிட்டிருப்பதால், ஜனவரி 2-ந்தேதியன்று ஆரம்பிக்க நான் உத்தேசித்திருந்த உண்ணாவிரதம் காலம் குறிப்பிடாமல் ஒத்திவைக்கப் பட்டிருக்கிறது. அதாவது வைஸிராயின் முடிவு அறிவிக்கப்படும் வரையில் என் உண்ணாவிரதத்தை நிறுத்தி வைத்திருக்கிறேன். இப்படி ஒத்திவைப்பதற்கு ஸ்ரீ கேளப்பன் சம்மதிக்கிறார். பொதுஜனங்களுக்காகவே உண்ணாவிரதம் உத்தேசிக்கப்பட்டது. ஏற்கெனவேநான் என் நிலையை அறிவித்திருக்கிறேன். எனினும் அதை மீண்டும் ஒருமுறை கூறுகிறேன். என் உண்ணாவிரதம் மத சம்பந்தமானது; ஆகவே இதை ஸ்பஷ்டமாய் எடுத்துரைக்கக்கூடியதாயில்லை. ஆனால் பொதுஜன மனச்சாட்சியைத் தூண்டுவதற்காக இது உத்தேசிக்கப்பட்டது என்று கூறுகிறேன். மனிதப் பிரயத்தனங்களால் குற்றங் குறைகளுக்குப் பரிகாரம் தேடும் சாதாரண முயற்சிகள் பலன் பெறுதொழியும் காலத்தில், தபஸ் அல்லது விரதம் அனுஷ்டிக்கலாம் என்று ஹிந்து மதம் போதிக்கிறது. இதன் கடைசி முடிவு என்னவெனில் நிபந்தனையில்லாமல் பட்டினி கிடப்பதாகும். ஆகவே நான் உண்ணாவிரதம் அனுஷ்டிக்க உத்தேசித்ததில் புதிய விஷயம் எதுவும் இல்லை. ஆனால் ஜனங்களிடையே எனக்கு உண்மையாகவோ அல்லது வெறுமையாகவோ எனக்குச் செல்வாக்கு இருக்காமற் போனால், என் உண்ணாவிரதத்தைப் பற்றி யாவரும் கவனித்திருக்கமாட்டார்கள்.

### ஹிந்து மதம் க்ஷீணித்துவிட்டது.

ஒரு காலத்தில் ஹிந்து மதத்திற்கு இருந்த பரிசுத்தத்தையும் சக்தியையும் அது இப்பொழுது இழந்துவிட்டிருக்கிறது என்பது என்னுடைய அபிப்பிராயம். ஹிந்து மத சாஸ்திர புராணங்களே, சமயோசிதமாய் நிலைமைக்கேற்றவாறு ஆசார அனுஷ்டானங்களை மாற்றியமைத்து, அபிவிருத்தி பெற்று வந்திருக்கிறது என்பதற்குப் போதிய திருஷ்டாந்தங்களாகும். கடவுளால் சாஸ்திரங்கள் அருளிச் செய்யப்பட்டவை என்னும் கொள்கைக்குப் பதிலில்லாமல், புதிய சீர்திருத்தங்களையும் மாறுதல்களையும் செய்ய ஹிந்துமதம் தயங்கவே இல்லை. ஆகவேதான்குவேதங்களோடுஅதிகாரம் பெற்ற மற்ற சாஸ்திரங்களும் ஹிந்துமதத்தில் காணப்படுகின்றன. ஆனால் இம்மாதிரி சமயோசிதமாய் மாறுதல்களைச் செய்து முன்னேற்றமடையும் காலம் நிறுத்தப்பட்டுவிட்டது. எழுதப்பட்டிருக்கும் நூல்களைக்கொண்டு ஆத்ம ஞானத்தைக் கண்டு பிடிப்பதற்குப் பதிலாக அவைகளே முடிவான அதிகாரம் பெற்றவைகளாகிவிட்டன. இவைகள் மக்களின் ஆத்ம உணர்ச்சிகளைத் திருப்தி செய்தாலும், செய்யா விட்டாலும், இவைகளின் கட்டளையின்படி நடக்க வேண்டும் என்று வற்புறுத்தப்பட்டு வந்திருக்கிறோம். கடவுளிடமே போராடி, வாதிட்டு, வேதங்களிலும் மற்ற சாஸ்திரங்களிலும் காணப்படும் உண்மைகளை இறைவனிடமிருந்து பெற்ற பெரியோர்களின் சந்ததியார் பின்னால் அசக்தமடைந்து, பழைய செய்யுள் அல்லது மந்திரத்திலிருந்து புதிய அர்த்தத்தைப் பெறவோ அல்லது புதிதாக ஒன்றைச் செய்யவோ சக்தியற்றுப்போய்விட்டார்கள். 'தாங்கள் கடவுளுடன் போராடியாகிவிட்டதென்றும், முடிவான உண்மைகள் வெளியாகிவிட்டனவென்றும், கடைசி சாஸ்திரத்தின் கடைசி செய்யுளால் எல்லாம் தீர்ந்துவிட்டதாயும் கருதப்படலாயிற்று. ஆகவே முற்றிலும் முரண்படும் சாஸ்திரங்களை ஒன்றுக்கொன்று ஒத்திட்டு, படை படையாக சாஸ்திரிகள் கிளம்பி விட்டார்கள். காலப் பொருத்தம் இருக்கிறதா? தீவிர ஆராய்ச்சியால் அறியும் உண்மைகளை இவைகள் திருப்தி செய்யக் கூடியவைகளா? என்னும் கேள்விகள் அசட்டை செய்யப்பட்டன. தபஸ்கள் கூட வெளித் தோற்றமாக முடிந்தனவே யன்றி, மாணுவஸ்தைப்படும் மனச்சாட்சியின் உபதேசமாக மதிப்படையவில்லை. இப்படி நான் கூறுவதில் தவறிருக்கலாம். ஆனால் நான்இந்தஅபிப்பிராயங்கொண்டிருக்கிறேன். படிப் படியாய் வாழ்க்கையில் ஒற்றுமை காணவேண்டும் என்பது ஹிந்து மதத்தின் ஹிருதயத்தைப் போன்ற உண்மையாகும். இது கேவலம் வேதாந்த கோட்பாடாக மட்டும் நிற்கவில்லை. வாழ்க்கையில் நிதர்சனமாய் காணப்படும் விஷயமாகும். இதைத் தற்போதைய சாஸ்திரிகளும் சாஸ்திரங்களும் மறுக்கவே, நான் அறிந்த வரையில மதானுஷ்டானத்தோடு நான் இடைவிடாது வாழ்ந்து வந்திருப்பதால், ஹிந்து மதம் கூறும் தவம் அல்லது பட்டினியை யனுஷ்டிக்கும் யோக்கியதை எனக்கு இருக்கிறது என்று நான் கருதுகிறேன். இம்மாதிரி செய்யும்படி கடவுள் கட்டளை எனக்குப் பிறந்திருக்கிறது என்று நான் நம்புகிறேன்.

### பலாத்காரமில்லை.

இம்மாதிரியான நோக்கத்துடன் அனுஷ்டிக்கப்படும் உண்ணாவிரதத்தில் பலாத்காரம் எதுவும இல்லை என்பதை வாசகர்கள் உணரலாம். நிபந்தனையின்றி நான் பட்டினி கிடக்கத் துணிந்தாலும்; அதில் பலாத்காரம் எதுவும் இல்லை என்பது வெளிப்படை. பொது ஜனங்கள் எதைச் செய்தாலும் செய்யாமற்போனாலும், பட்டினி நிற்காது. ஆகவே நிபந்தனையுடன் அனுஷ்டிக்கப்படும் உண்ணாவிரதத்தை பலாத்காரம் என்று சொல்வது அந்த நிபந்தனையால்தான் என்று தெரிகிறது. உண்ணாவிரதம் காரணமாக ஜனங்கள் அவர்கள் கொள்கை அல்லது இஷ்டப்படி நடக்காமல் தடுக்கப்படவில்லை என்பதை என் அனுபவத்திலிருந்து அறிந்திருக்கிறேன். குருவாயூரில் வாக்கெடுத்ததில் இந்த உண்மை மெய்ப்பிக்கப்பட்டிருக்கிறது.

### ஒத்திவைத்ததன் அர்த்தம்.

என் உண்ணாவிரதத்தை ஒத்திவைக்கப்பட்டிருப்பதன் அர்த்தத்தை மக்கள் நன்குணரவேண்டும். மக்கள் அதிகமான அர்த்தம் எதையும் இதில் காண்பதற்கில்லை. குருவாயூர் கோயிலில் ஹரிஜனங்களுக்கு அனுமதி பெறுவதற்காக உண்ணாவிரதம் உத்தேசிக்கப்பட்டது. இந்த லட்சியத்தை நிறைவேற்றி வைக்க, என் உண்ணாவிரதத்தை மீண்டும் ஆரம்பிக்க நியாயமேற்படின், அது கட்டாயம் வந்தே தீரும். உதாரணமாக சீர்திருத்தக்காரர்கள் உறங்கிவிட்டாலும் தேவையானசட்டங்களைச்செய்யும்படி வற்புறுத்தும் பொதுஜன அபிப்பிராயமனாலும், கோர்ட்டுகளின் தீர்ப்புகள், தர்ம சொத்துக்களைப்பற்றிய சட்டங்கள், ஹிந்து தர்ம பரிபாலன சட்டம் ஆகியவைகளால் விளையும் தடைகளை நீக்க முன்வராவிட்டாலும் உண்ணாவிரதம் வந்தே தீரும். ஹிந்து மத தர்மபரிபாலன சட்டம் மதத்தைப் பாதிக்கிறது என்பதில் சந்தேகமில்லை. அதாவது முதலில் கொண்ட வாக்குறுதியை நிறைவேற்ற, பட்டினி கிடக்கவேண்டி வரலாம். குருவாயூர் ஆலயத்தில் ஹரிஜன அனுமதியளிக்கச் சாதகமாயிருப்பவர்களின் தவறுதல்களாக, பட்டினி கிடக்கவேண்டி வரலாம்.

### எர்ரவாடா ஒப்பந்தம்.

எர்ரவாடா ஒப்பந்தம் ஜாதி ஹிந்துக்களின் பிரதிநிதிகளுக்கும் ஹரிஜனங்களின் தலைவர்களுக்கும் ஏற்பட்டது. இதை ஆமோதிக்கும்பொழுது, பம்பாயில் நடைபெற்ற என்றும் மறக்கமுடியாத, மகாநாட்டில் பின்வரும் தீர்மானம் செய்யப்பட்டது.

"ஹிந்துக்களுக்குள் யாரும் பிறப்பின் காரணமாக தீண்டப்படாதவர்கள் என்று இனி ஒதுக்கி வைக்கப்படக்கூடாது. இதுவரையில் தீண்டப்படாதவர்கள் என்று கருதப்பட்டு வந்தவர்களும் மற்ற இந்துக்களைப் போல் எல்லா பொதுக் கிணறுகள், பள்ளிக்கூடங்கள், பொதுச் சாலைகள், பொது இடங்கள் ஆகியவைகளில் சமத்துவமாய் அனுமதி பெறுமாறு செய்தல் வேண்டும். இந்த உரிமைகளை விரைவில் சட்ட சம்மதமாக்குதல் வேண்டும். சுயராஜ்யம் ஏற்படுவதற்குள் இவைகள் சட்டமாக்கப்படவில்லையாயின், சுயராஜ்ய சட்டசபையின் முதலாவது வேலையாக இது செய்யப்படவேண்டும். ஆலய அனுமதி உட்பட தீண்டப்படாதவர்கள் என்று எண்ணப்பட்டு வரும் ஜனங்களுக்கிருக்கும் சமூக இடுக்கண்களை எல்லாம் நீக்கவேண்டியது இந்துத் தலைவர்களின் கடமையாம்."

இந்துத் தலைவர்கள் இம்மாதிரியான ஒப்பந்தத்தைச் செய்திருக்கிறார்கள். இதை நிறைவேற்றி வைக்க வேண்டியது இந்திய தேசிய ஜாதியின் ஒரு பகுதியினராகிய இந்துக்கள் கடமையாகும். நாளுக்கு நாள் அதிகமாக ஹரிஜனங்களுடன் நெருங்கி உறவாடி, கோயில்களையும் இதர இடங்களையும் அவர்களுக்குத்திறந்து

(12-ம் பக்கம் பார்க்க)

### ஆட்டுக்கு யிரண்டு தலை.

சுமார் இரண்டு வாரங்கட்கு முன்பு திருநெல்வேலி ஜில்லா ஆறுமுகநேரியில் ஒரு செம்மறியாடு இரண்டு வெவ்வேறு தலைகளுடைய ஒரு குட்டியைப் போட்டது. அக்குட்டி சில மணி நேரங்கள் உயிருடனிருந்து பின் இறந்து போய்விட்டது.

### இருதலை ஆமை.

அமெரிக்காவில் ஷெனிக்டாடி என்ற கடற்கரையில் ஒன்பது வயதான ஒரு பெண் குழந்தை ஓர் அதிசயமான கடலாமைக் குஞ்சை கண்டெடுத்தாள். அக்குழந்தை F. B. கிளிப் என்ற ஒரு மின்சாரக் கம்பனி டயரக்டரின் புதல்வியாதலால் அவ்வாமை மிஸ்டர் கிளிப்பினிடம் வந்தது. அது செப்டம்பர் 24-ந்தேதி பொரிக்கப்பட்டதாம். அதனோடு பொரிக்கப்பட்ட பல குஞ்சுகள் சுகமாயிருந்து வருகின்றன. சில பண்டிதர்கள் எக்ஸ்ரேயில் அக்குஞ்சை போட்டுப் பரிசோதித்தார்கள்: அதற்கு குரல்வளை இரண்டும் Y வடிவத்தில் இணைந்திருக்கின்றன. இக்குரல் வளை உட்கொள்ளப்படுகின்ற ஆகாரத்தை ஒரு இரைப் பைகளில் சேர்க்கின்றதா அன்றி இரு இரைப் பைகளுக்குள் புகுத்துகின்றதா வென்பது இன்னும் பரிசோதித்தறியப் படவேண்டியிருக்கிறது.

இவ்வாமையின் கை கால்களெல்லாம் இயற்கையாகவே அமைந்திருக்கின்றன. ஆனால் மேல் தோடு மட்டிலும் சிறிது அளவில் கூடியிருக்கின்றது. இரு தலைகளும் வேலை செய்யும் முறை வேடிக்கையாயிருக்கின்றது. ஒரு தலை தூங்கும் போது இன்னொரு தலை விழித்திருக்கின்றது. சில கால் ஒரு தலை தண்ணீரில் ஆழ்ந்திருக்கும் போது மற்றொன்று மேலே எழும்பியிருக்கும். ஒவ்வொரு தலையும் அதனதன் பக்கங்களிலுள்ள கால்களை இயக்குவதாய்த் தோற்றுகின்றது. சில கால் இரு தலைகளும் இரு திசைகளை நோக்கிப் புறப்பட முயல்வதுண்டு. வலது தலை இடது தலையைவிடக் கொஞ்சம் பெரிதாயிருக்கிறது.

### பத்து மாதம் தூக்கம்.

அமெரிக்க நகரமாகிய சிகாகோவில் ஓர் அழகிய பெண் கடந்த 10 மாதங்களாகத் தூங்கிக் கொண்டிருக்கிறாள். டாக்டர்கள் அதனை ஒரு விதத் தூக்கு நோய் என்கின்றார்கள். இந்த நெடுந் தூக்கத்தின் போது அவளுக்கு சிலதிராவகப் பொருள்கள் உணவாக அளிக்கப்பட்டன. சமீபத்தில் தூக்கம் விழிப்பதற்கான லக்ஷணம் தென்பட்டது. அதாவது அவளுடைய கைகால்கள் இடையிடையே அசைந்தன; அவளை சிச்சிக்கு வரும் டாக்டர்கள் அவள் எப்போது எழுந்திருப்பாள் என்று கூற வகையறியாது தவிக்கின்றனர்.

# இயற்கையின் விநோதம்.

## ஏக காலத்தில் மூன்று சூரியர்.

## வானத்தில் மண்சுவர்.

### ஏககாலத்தில் மூன்று சூரியர்

சென்றவாரம் உலகில்பலவிடங்களில்ஆச்சரியகரமான இயற்கைவிநோதங்கள் பல நடைபெற்றிருக்கின்றன. அறிவியற்கலைஞர் பலர்விளக்கம்கூறவியலாது தவிக்கின்றனர்:—

லண்டன் நகரிற்கு சமீபம் ஆகாயத்தில் ஏககாலத்தில் மூன்று சூரியர்கள் ஒளிவீசினார்கள்.

ஜினோவாவில் (இத்தாலியா) வானத்திலிருந்து மண்மழை பெய்தது.

சில் செஸ்டரில் (பெர்க்) சாம்பல் நிறமான மழை'' யுகாந்த கால தாரைபோல்'' பெய்தது.

சாமர்செட் (இங்கிலாந்து) நகரத்தில் ஒன்றன் பின்னொன்றாய் ஏழு மழை விற்கள் (வானவில்) தோன்றின. அவை நீண்ட நேரம் தெரிந்ததோடு புயலும் சூரிய வெளிச்சமும் இருந்தபோதும் காணப்பட்டன. கார்ட்டூம் (ஆப்ரிக்கா) என்ற நகரில் ஒரு ஆகாய விமானி 4000 அடி உயரத்தில் பறந்து சென்றபோது திடீரென பூமியை நோக்கிப் பாய்ந்து ஒரு சுவரில் மோதப்போவதாகக் கண்டான். அப்பால் பார்த்தபோது அவன் கீழே விழவில்லையென்றும், விமானம் சுவரில் மோதவில்லையென்றும், எதிரில் சுவர் போல் தோன்றியது காற்றில் மண் எழும்பித் தோன்றியதேயென்றும் தெரிந்தது. மண் மணிக்கு 35 மைல் வேகத்தில்அவனை நோக்கிப் பறந்து வந்துகொண்டிருந்தது.

### 93 வருடம் க்ஷவரம் செய்யவில்லை.

ந்யூ சௌத் வேல்ஸ் என்ற பகுதியில் கோகாரா வென்ற விடத்தில் குடியிருக்கும் உவில்லியம் ராபின்சன் என்பவர் 93 வயது வரையிலும் க்ஷவரம் செய்ததேயில்லை. அவருடைய தாடி 21 வயது முதல் நரைத்திருக்கின்றதாம்.

### இரட்டை விமானப் பறவை

நியூயார்க் நகரத்துக்கு அருகே நான்கு இறக்கைகளை உடைய நூதனமான பறவையொன்றிருக்கிறது. அது பான்டம் வகுப்பை சேர்ந்த ஆண் பறவை. அப் பறவையின் சொந்தக்காரர் நியூ ஜிர்ஸியிலுள்ள ஒரு விவசாயி. அப் பறவை பறக்கும் பொழுது இரட்டை இறக்கை விமானம் போல் தோற்றும்.

### விரலில்லாத பெண்.

பர்மன்சி என்ற நகரில் மிஸ் கரி ரிவட் என்ற 17 வயதுள்ள பெண்ணுக்கு பிறவியிலேயே இரண்டு கைகளிலும் விரல்களில்லை. கட்டை விரலுமில்லை. அவள் லண்டன் ஆர்ட் காலேஜ் ஸ்காலர்ஷிப்பைப் பெற்றாள். அவளுக்கு பின்னலிலும், தையலிலும், பியானோ வாசிப்பதிலும் மிகவும் தேர்ச்சியுண்டு; இவள் மற்றவர்களைக் காட்டிலும் தன் இரண்டு உள்ளங்கைகளைக் கொண்டும் அதிவேகமாக எழுதுவாள். இவள் தற்சமயம் காம்பர் வெல் பள்ளிக்கூடத்தில் எழுதும் கலைபயில்கின்றாள். இவ்விதமான சக்தியை சென்ற ஆறு வருஷங்களாக விருத்தி செய்து வருகிறாள்.

---

## டாக்டர் ஆலம் குணமடைந்து வருகிறார்.

### ஆபரேஷன் அவசியமேயில்லை.

பாஞ்சாலத் தலைவர் டாக்டர் ஆலம் குணமடைந்து வருகிறார். சிறிது தூரம் மோட்டாரில் சவாரி போய்வர அவர் அனுமதிக்கப்பட்டிருக்கிறார். கல்கத்தா கார்ப்பொரேஷன் மெம்பர் டாக்டர் பி.சி. ராயைக்கேட்டதில், ரணசிகிச்சை வைத்தியர்கள் கூடி ஆலோசித்ததாகவும் இப்பொழுது குணமேற்பட்டிருப்பதால் ஆபரேஷன் அவசியமில்லை என்று முடிவு செய்ததாகவும் கூறினார். டாக்டர் ஆலம் மின்சார சிகிச்சை பெற்று வருகிறார்.

---

## சிந்துப் பிரிவினை.

### இந்தியா மந்திரிக்குத் தந்தி.

கராச்சி ஹிந்து மகாசபையின் தலைவர் டாக்டர் ஹிங்கராணி இந்தியா மந்திரிக்கு அனுப்பியிருக்கும் தந்தியில், நிபந்தனையின்றி சிந்துவைத் தனி மாகாணமாகப் பிரிப்பதை ஹிந்துக்கள் ஆக்ஷேபிப்பதாகவும் ஹிந்துக்களுக்குப் பாதுகாப்புகள் அளிக்க வேண்டுமென்றும், பம்பாயில் இது காறும் சேர்ந்திருந்ததால் நன்மை ஏற்பட்டிருக்கிறதென்றும், இதற்குப் பங்கம் நேரிடுமானால், பிரிவினையை ஹிந்துக்கள் பலமாய் எதிர்ப்பார்கள் என்றும் தெரிவித்திருக்கிறார்.

---





## குருவாயூரில் வைதீகர்கள் கூட்டம்.

டிசம்பர் 30ந்தேதி குருவாயூர் வர்ணாச்ரம மகாநாட்டுப் பந்தலில் வைதீகர்கள் கூட்டமொன்று நடைபெற்றது. அம்மகாநாட்டின் முக்கியநோக்கம் ஸநாதன தர்மத்தை யெப்படிக் காப்பாற்றுவதென்பதைப் பற்றி யோசிப்பதாம். கோவர்த்தன மடம், ஜகன்னாதம் சங்கராசாரியார் சுவாமி சொரூபானந்தர், வல்லபாசாரிய பீடாதிகாரி கோகுலநாத் மகாராஜ், உடுப்பி மாத்வாசார்ய பீடாதிகாரி, ஸ்ரீங்கேரி மடம் பிரதிநிதி, கும்பகோண மடம் பிரதிநிதி, புஷ்பகிரி மடத்தின் பிரதிநிதி, ஸ்ரீ அஹோபில மடம் பிரதிநிதி இன்னும் பல வித்வான்கள் பண்டிதர் கூடியிருந்தனர். கூட்டத்திற்கு சங்கேஸ்வர காவிர மடம் சங்கராசாரி தலைமை வகித்தார். அவர் சநாதன தர்மபரிபாலனம் பற்றிப் பேசினார். பின் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. அவற்றில் ஒன்று சாமோரின் ஹரிஜனங்கட்கு அனுமதியளிக்காதிருப்பதுபற்றி அவரைப் புகழ்ந்து அவருக்கு 'மகா வீர தர்மதீர' என்ற பட்டத்தை அளித்தது. மற்றொன்று மத சம்பந்தமான உரிமைகள் ஸ்ருதி, ஸ்மிருதி, புராண, ஆகமங்கள் முதலியவற்றாலளிக்கப் படவேண்டுமே யன்றி சட்டசபைகளால் அளிக்கப்படுவனவல்ல வென்று கூறிற்று. இன்னொன்று அரசாங்கம் மதத்தில் தலையிடுவதை தடைசெய்தது. பிறிதொன்று எல்லா சனாதனிகளையும் வர்ணாச்ரம தர்மத்தைக் குலைக்கிற சபைகளிலிருந்து விலகிக் கொள்ளும்படி வேண்டிக்கொண்டது. ஐந்தாவது தீர்மானம் ஸநாதன தர்மத்தை பள்ளிக்கூடங்கள் பத்திரிகைகள், சபைகள் மூலம் வளர்க்க வேண்டுமென்றது. ஆறாவது தீர்மானம் அரசாங்கத்திடம் தற்போதிய ஆலயப் பிரவேச கிளர்ச்சியை அடக்கிவிடும்படி முயற்சிக்கக் கேட்டுக்கொண்டது. கடைசி தீர்மானம் மதத்தில் தலையிடுவதில்லை யென்று கூறுபவர்கட்கே ஓட்டுக் கொடுக்கவேண்டு மென்று கேட்டுக்கொண்டது.

### ஹிந்து மதக் கல்வி மகாநாடு.

அகில இந்திய முதலாவது ஹிந்து மதக் கல்வி மகாநாடு 30-ந்தேதி நடந்தது. திருவாளர்கள் எஸ். ராகவ ஐயங்கார், கே பால சுப்பிரமணிய ஐயர் முதலானவர்களும் அதற்கு வந்திருந்தார்கள். சூரத் புரொபஸர் தர்க்கல் பேசியபின், சென்னை திரு. வி. வி. ஸ்ரீனிவாஸ ஐயங்கார் பிரதிநிதிகளை வரவேற்று ஸநாதன தர்மத்தின் மகிமையை சிறுவர்களுக்கு விளக்கக்கூடிய படிப்பே சிலாக்யமென்று சொல்லி, பூரி ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகளை அக்கிராஸனத்திற்குப் பிரேரித்தார். பண்டித அனந்தகிருஷ்ண சாஸ்திரிகள் ஆமோதித்தார். இதன் மத்தியில் கோயிலிலிருந்து புஷ்பமாலைகள் வந்து சேர்ந்தன. எல்லா தர்மாசார்யார்களுக்கும் மாலை போடப்பட்டது. அடியிற்கண்ட தீர்மானங்கள் செய்யப்பட்டன:—தற்போதுள்ள தெய்வபக்தி யுண்டுபண்ணாத தேசாசாரத்தை அளிக்கக்கூடிய கல்விமுறை ஒழிய வேண்டியது. எல்லாக் கஷ்டங்களுக்கும் அதுவே காரணமாயிருக்கிறது. ஸநாதன தர்ம நீதியில் உயர்தரமான உண்மைக் கல்வி போதிக்க எல்லாப் பிரயத்தனங்களும் செய்யவேண்டியது. சபைகள், பிரசங்கங்கள், பாடசாலைகள் மூலம் இந்நோக்கத்தை நிறைவேற்றவேண்டியது. பழைய குருகுல முறையில் ஸநாதன தர்ம ஸர்வ கலாசாலை ஒன்று அத்தியாவசியம். சம்ஸ்க்ருத ஸர்வகலாசாலை ஒன்று ஏற்படுத்த வேண்டியது. இதனபொருட்டு ஒரு கமிட்டி நியமிக்கிறது. இருக்கிற பள்ளிக்கூடங்களிலும் கலாசாலைகளிலும் மதக் கல்வி போதிக்க ஏற்பாடு செய்யும் அவசியத்தை வற்புறுத்துகிறது.

---

### கல்யாணப் பரீக்ஷை.

ஜப்பானில் மணம்புரிய விரும்பும் மாதர்களுக்கென்று ஓர் விசேஷமான கலாசாலை நிறுவப்பட்டிருக்கின்றது. அதில் கல்யாணமான பிறகு அவர்கள் எவ்வண்ணம் நடந்துகொள்ள வேண்டும், பிள்ளைகள் பெற்றால் எவ்வாறு காப்பாற்றிக்கொள்ளவேண்டுமென்பனபோன்ற பல வாழ்க்கை இரகசியங்கள் கற்பிக்கப்படுகின்றன. அக் கலாசாலையில் தேறி நற்சாட்சி பெற்றவர்கட்கே கல்யாணம் செய்துகொள்ள அனுமதி கொடுக்கப்படுகின்றது.

## காந்திஜீ விடுதலை

### பலர் சொல்லும் ஜோசியம்

### டெய்லி ஹெரால்டு கூற்று.

"காந்திஜீ விடுதலை செய்யப்படமாட்டார், வில்லிங்டன் ராஜினாமா செய்வார் எனும் செய்திக்கு ஆதாரமில்லை" என டெல்லியிலிருந்து நம்பத்தகுந்த செய்தி கிடைத்திருப்பதாக சமாசாரப் பத்திரிகைகள் கூறுகின்றன. ஆனால் லண்டன் டெயிலி ஹெரால்டு பத்திரிகையின் ராஜதந்திர நிருபர் சர். சாமுவேல் ஹோரும் சாங்கி பிரபுவும் இந்திய அரசியல் சீர்திருத்த வேலை முடிவில் காங்கிரசின் ஒத்துழைப்பைப் பெற வழி தேடுவது திண்ணம். அதுபற்றியே அவர்கள் சர் சாப்ரூவையும் ஜயகரையும் காந்திஜியுடன் கலந்து பேசுமாறு கேட்டுக்கொண்டிருக்கின்றனர். ஆனால் சர். சப்ரூவும் ஜயகரும் காந்திஜியுடன் சிறைக்குள் எவ்விதமான பேச்சும் பேச இஷ்டமில்லை எனக் கூறிவிட்டனர். காந்திஜீ வெளியே விடப்படுவாரென சாங்கியும், சாமுவேல் ஹோரும் அவர்களுக்கு உறுதி கூறியிருக்கின்றனர். இம்மாதிரி நெருக்கடியான நிலைமை வருவதற்குண்டான காரண முழுவதையும் அறியு முன்னர் டெல்லி அதிகாரக் கோஷ்டியினர் ஹோர் விருப்பத்திற்கிசைய மறுக்கின்றனர். இவ்வாறு சொல்லிப் பிடிவாதமாக இருந்தால் ஹோரின் கொள்கை நாசமாகும். மிதவாதிகளுக்கு சர்க்கார் மீதிருக்கும் நம்பிக்கை போய்விடும். விலிங்டன் பிரபு கோடை கால முடிவிலோ அல்லது மாரி கால ஆரம்பத்திலோ ராஜிநாமா செய்வார்' எனத்தான் நம்புவதாக அந்நிருபர் கூறுகிறார்.

### லிபர்ட்டி பத்திரிகையின் கூற்று.

ராஜிநாமாச் செய்து விடுவதாக விம்லா பயமுறுத்தி மகாத்மா காந்தியும் இதர காங்கிரஸ் தலைவர்களும் விடுதலையடைவதைத் தடுத்துவிட்டது. சட்டமறுப்பைக் கைவிட்டு விடுவதாக மகாத்மா உறுதிமொழி கூறவேண்டு மென்று முன்னர் சொல்லியதை இப்பொழுது விட்டுக் கொடுப்பது கௌரவக் குறைவாகி விடுமென்ற காரணம்பற்றி அவ்விதம் செய்வது அசாத்தியமாய் விட்டதால் காந்தி-ஸாப்ரூ-ஜெயகர் சம்பாஷணையின்பலன் எதிர்பார்க்கப்படுகிறது.

பல மறுப்புகள் வெளிவந்த போதிலும், புதிய சீர்திருத்தம் அனுஷ்டானத்திற்கு வருகையில் யார் ராஜப்பிரதிநிதியாக நியமிக்கப்படலாமென்பதுபற்றி பார்லிமெண்டு கோஷ்டிகளுக்குள் விவாதம் நடந்துவருகிறது. புதிய ராஜப்பிரதிநிதியே புதிய சீர்திருத்தத்தை அங்குரார்ப்பணம் செய்து வைப்பாரென்பது நிச்சயம்—

### ஸ்ரீ ஆண்ட்ரூஸ் அறிக்கை.

ஸ்ரீ ஆண்ட்ரூஸ் இந்தியாவுக்கு விடுத்த புது வருஷ செய்தியில் வட்டமேஜை கூட்டுக் கமிட்டி வேலை ஆரம்பமாகுமுன் ராஜீய சிறையாளர்கள் நிபந்தனையின்றி விடுதலை செய்யப்படுவ ரென்றும், தீண்டாமை விலக்கு வகுப்பு பேத வொழிப்பு ஆகிய அஸ்திவாரத்தில் கட்டப்படும் சுயராஜயமே வலுப்பெற்றிருக்கு மென்றும் கூறுகிறார்.

### தொழிற்கக்ஷியார்.

மிஸ்டர் மாக்ஸ்டன், மிஸ்டர் பிராக்வே, காந்தி சங்கம், லண்டன் தேசிய காங்கிரஸ் சங்கம், ஆகியோர் சேர்ந்து ஒரு அறிக்கை விடுத்துள்ளார்கள். அதில் கூறுவதாவது:- தற்கால கவர்ன்மெண்டுக்கு நிலைமையை சமாளிக்க வேண்டிய புத்திசாலித்தனம் கிடையாது. ஒட்டாவா வொப்பந்தங்கள் மூலம் பொருளாதார நிர்ப்பந்தங்களை செய்தோ ஸர்வ கக்ஷி மகாநாட்டு ராஜீய புரட்டுகளாலோ காங்கிரஸ் சமாதானமடையாது. முடிவில் கவர்ன்மெண்டார் காங்கிரசுடனேயே சமாதானம் செய்ய நேரிடும். அடக்குமுறை நீடிப்பதால் இந்தியர் நம்பிக்கையிழக்கின்றனர். சர்க்கார் எல்லா ராஜீய சிறையாளர்களையும் விடுதலை செய்து முடிவு செய்யவேண்டும். பிரிட்டனுக்கு சிறந்த பாதுகாப்பு இந்தியர்களின் நல்லுணர்ச்சியைப் பெறுவதே.

---

## லான்ஸ்பரி அறிக்கை.

இங்கிலாந்துத் தொழிற்கக்ஷித் தலைவராகிய லான்ஸ்பரி இந்தியாவுக்கு அனுப்பியிருக்கும் புதுவருஷ வாழ்த்தாவது:—

"இந்தியத்தாயின் அருமைப் புதல்வர்களே! உழவர்களே! தொழிலாளர்களே! எல்லோருக்கும் என் அன்பான வாழ்த்து உரித்தாகுக. சமாதானம் சமரசம், சுதந்திரம் உம்மிடை புதுவருஷத்தில் உண்டாகுக. அடக்குமுறை அவசரச் சட்டங்கள் அகற்றப்படுமென நம்புகிறோம். அதிக்ரமச்செயல்கள் நின்று விடுமென நம்புகிறோம். தீமையால் தீமையை ஜெயிப்பதாகாது. பலம் பலத்தை உண்டு பண்ணும். அது கூடாது வட்ட மேஜையில் காங்கள் கலந்து கொள்ளவில்லை, அது சரியான பிரதிநிதித்வம் பெறாததே காரணம். பூர்ணப் பிரதிநிதித்வம் பெற்ற காங்கிரசைச் சேர்ந்தவர்கள் சிறையிலிருக்கின்றனர். அவர்கள் விருப்பமின்றி எந்த ஒப்பந்தமும் உருப்படாது. ஆகவே அரசியல் திட்டம் வகுக்கப்படு முன் சர்க்கார் சிறைக்கதவுகளை அகலத்திறந்து விட்டு இந்தியாவின் தலை விதியை நிர்ணயிக்க காந்திஜீ முதலியோரை வரவழைக்க வேண்டும். இந்தியா சுயாட்சி பெறும் விஷயத்தில் ஆதரவளிப்பதே எங்கள் லக்ஷியம். அதில் இம்மியும் மாறோம். 1933-ம் வருடத்தில் காந்திஜீ ஜோஷி முதலியோர் வட்டமேஜையிலமர்ந்து வைசிராய்க்குதவி, ஒரு அரசியல் திட்டத்தை வகுத்து, இந்திய அரசியல் கடிவாளத்தை இந்தியரே பெற்று மற்ற சுதந்திரர்களுடன் சம அந்தஸ்த்தைப்பெறுவார்களென எண்ணுகிறேன்."

---

### சட்ட மறுப்பியக்க வருஷோற்சவத்துக்குத் தடை.

"4—1—33ந்தேதி அகில இந்திய காங்கிரஸ் காரியக்கமிட்டி அறிக்கைக் கிணங்க சென்னையில் சட்டமறுப்பியக்க வருஷோத்சவம் நடத்த முயற்சிகள் செய்யப்படுவதாய்த் தெரிவதாலும் அம்முயற்சி சமாதானபங்கத்தை யேற்படுத்தக் கூடுமாகையாலும் அத்தகைய விழாக்களை நடத்தக்கூடாதென்று போலீஸ் சட்டம் 41ம் பிரிவின்படி தடைசெய்கின்றேன்'' என்று சென்னை போலீஸ் கமிஷனர் உத்தரவு பிறப்பித்துள்ளார்.

---

### தபாலாபீஸ் ரொக்கக் கடன் பத்திரங்கள்.

இந்தியா கவர்ன்மெண்டின் வரவு செலவு இலாகாதார் பின்கண்ட அறிக்கையை வெளியிட்டிருக்கின்றார்கள்:—வட்டி விகிதம் இன்னும் குறைந்து விட்டதால் தபாலாபீஸ் ரொக்கக் கடன் பத்திரங்கள் (காஷ் சாடிபிகேட்டுகள்) மூலம் கிடைக்கும் வருவாய் இன்னும் குறைந்து விட்டது. ஜனவரி 3ந்தேதிக்குப் பிறகு கொடுக்கப்படும் சர்டிபிகேட்டுகளுக்குப் புதிய விகிதப்படியே பணம் திருப்பிக் கொடுக்கப்படவேண்டியிருக்கும். இதன்படி 8 ரூ. 5 வருஷ முடிவில் 10 ரூபாயாக ஆகும். ஜனவரி 3ந்தேதி யன்றோ அல்லது அதற்குப் பிறகோ 5வது வருஷம் பூர்த்தியாகின்ற பத்திரங்களை (சர்டிபிகேட்டை) வைத்துக் கொண்டுள்ளவர்கள் அவற்றின் காலகெடு தீர்ந்த பிறகு அவற்றை நீடிக்க இஷ்டப்பட்டால் இன்னும் 5 வருஷ காலத்திற்கு நீடிக்க அனுமதிக்கப்பட வேண்டு மென்றும் இந்தியா கவர்ன்மெண்டார் முடிவு செய்திருக்கின்றனர்.

---

### 42 ஆயிரம் கொள்ளை.

வங்காளம் பலாரி பேடலி ஜில்லாவை சேர்ந்ததோர் ஜமீந்தாரி கிராமத்தில் ரொக்கமாக 42000 மும் விலையுள்ள பல சாமான்களும் கொள்ளையிடப்பட்டன. கொள்ளைக்காரர்கள் மூன்று மோட்டார்களில் வந்தனர். கொள்ளைக்கு முன்பு ஜமீந்தாரையே தாக்கினராம்.

---

### சீக்கிய படைக்குத் தண்டனை

கிர்க்கியிலுள்ள ராணுவத்திற்கு வழி செப்பனிடும் படைத்தலைவனாகிய காப்டன் ஆர். எல் தாம்சனை ஒரு சீக்கிய படை வீரன் சுட்டுவிட்டான். அதனைக் கண்டிக்கும் முறையில் அந்தப் படையைச் சேர்ந்த எந்த சீக்கிய சிப்பாய்க்கும் 12 நாள் ஆயுதங்களைக் கையாட உத்தரவு கொடுக்கக்கூடாதென்று உத்தரவிடப்பட்டிருக்கின்றது.

## ஜில்லாமாஜிஸ்திரேட் கோர மரணம்.

கிருஸ்துமஸ் பண்டிகையைக் கொண்டாடுவதற்காக சண்டா ஜில்லா (நாகபுரிக்கு சமீபம்) மாஜிஸ்திரேட்டு தம் மனைவி மக்களுடன் சென்றிருந்தார். திரும்பி வரும்போது நாகபுரி ரயில்வேஸ்டேஷனுக்கு சமீபம் மோட்டார் குடைகவிழ்ந்து எல்லோரும் வீழ்ந்தனர். மாஜிஸ்திரேட் இறந்துபோனார். மனைவி மக்கள் சர்க்கார் உத்தியோகஸ்தர்களால் காப்பாற்றப்பட்டனர். அவர்கட்கும் பலமான காயம். மோட்டார் கவிழ்ந்த இரகசியம் தெரியவில்லை. பிந்திக்கிடைத்த செய்தியால் அவர் மனைவியாரும் இறந்துவிட்டதாய்த் தெரிகிறது.

---

### "எம்டன்'' பெயர்த் தகடு.

கடந்த மகாயுத்தத்தில் பெரும் பீதிக்கிடமாயிருந்த எம்டன் கப்பலின் பெயர்த் தகடு இப்போது ஜர்மனிக்குச் செல்லும் வழியில் லண்டனை அடைந்திருக்கின்றது. அத்தகடு ஆஸ்திரேலியா கவர்ன்மெண்டால் ஜர்மனி மீதிருக்கும் நல்லெண்ணத்தினுடையவும் அன்பினுடையவும் அறிகுறியாய் ஜர்மனிக்குக் கொடுக்கப் பட்டது. 1914ம்வருடம் அதாவது மகாயுத்தத்தின்போது எம்டனை ஆஸ்திரேலியாவுக்குச் சொந்தமான "சிட்னி" என்ற கப்பல் அழித்தது.

---

## நோட்டீஸ்.

### தேவகோட்டை டி. முன்சிப் கோர்ட்டு.

1932-ஞு O. P. No. 70.

சுப. சு. அரு. சுப்பய்யா செட்டியார் } மனுதார்.

அலமேலு ஆச்சி வகையறு } எதிர்மனுதார்கள்.

ஷை மனுதாரின் ஸகோதரி லேட் உமையாள் ஆச்சி என்ற விசாலாக்ஷி ஆச்சிக்குப் பாத்தியமாயுள்ள இகைகளை வறப்பத்த மனுதார் தனக்கு வார்ஸு சர்ட்டிபிகேட்டு கொடுக்க வேணுமாய் ஷை மனு தாக்கல்செய்து 8—1—33-ந் தேதிக்கு வாய்தா பேற்பட்டிருக்கிறது. ஏதும் ஆக்ஷேபனையுள்ளவர்கள் ஷை வாய்தாவில் ஆஜராகி தெரிவித்துக்கொள்ளவேண்டியது.

R. கிருஷ்ணசாமி அய்யங்கார்,

4—1—33, தேவகோட்டை. } மனுதார் வக்கீல்.

---

குமரன்

காரைக்குடி
ஆங்கிரஸ-ஹூ மார்கழி-மீ உஉ

## ஜில்லாத் தலைவர்.

இராமநாதபுரம் ஜில்லாபோர்டுத் தலைவர் ஸ்தானத்திற்குப் போட்டியே ஏற்படுகிறதில்லை. இராமநாதபுரம் ராஜா அவர்களே நெடுநாள் தலைவராக இருந்துவந்தார்கள். மற்ற ஜில்லா போர்டுகளெல்லாவற்றிற்கும் தலைவர்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமையளிக்கப்பட்ட பிறகும் இராமநாதபுரம் ஜில்லாவுக்கு நியமிக்கும் பாத்தியத்தை அரசாங்கத்தார் கைவிடவில்லை. ஆனால் வீரர் சௌந்திரபாண்டியன் தலைமைப்பதவியை உதறிய பின்னர் தேர்ந்தெடுக்கும் உரிமை நமக்குக் கிடைத்தது. அப்பொழுது சேற்றூர் ஜமீந்தாரவர்கள் விரும்பினார்கள். அடுத்த சந்தர்ப்பத்தை அளிப்பதாகச் சமாதானம் செய்யப்பட்டு இளஞ்சிங்கமான இராமநாதபுரம் ராஜா அவர்கட்கு அந்த ஸ்தானம் போட்டியின்றி அளிக்கப்பட்டது. இப்போதைய தேர்தலில் போட்டி தோன்றியது. பலமான வேலைகளும் செய்யப்பட்டன. பொதுவாகப் பலர் ராமநாதபுரம் ஜில்லா போர்டு நிர்வாகத்தில் திருப்திக் குறைவடைந்ததும் இடையில் நின்று இயக்குபவர்கள் சில்லரையான செயல்கள் செய்கிறார்களென்று கருதக் காரணங்களேற்பட்டதுமேயாகுமென்று இச் சந்தர்ப்பத்தில் சொல்லாதிருக்க முடியாது. பொதுவாக நிர்வாகத்திலிருப்பவர்கள் மேல் அதிருப்தி யேற்படுவது சர்வ சாதாரணமாகும். ஆனால் பொறுப்புள்ளவர்கள் அவற்றை ஊரும்போதே துடைப்பதற்குக் கவனமாக முன்னிற்றல் வேண்டும். எப்படியோ நிலைமையில் நெருக்கடி யேற்பட்டு விட்டது. சேற்றூர் ஜமீன்தாரவர்களைப் பற்றி நினைக்கும்போது ஒருமுறை அல்லது சில காலமாவது இராமநாதபுரம் ஜில்லா போர்டுத் தலைவராகச் செய்வது ஜில்லா வாசிகட்கும் இராமநாதபுரம் ராஜா அவர்கட்கும் பெருமை யளிப்பதாக இருக்குமென்பதை எவரும் மறுக்கமுடியாது. கனம் ராமநாதபுரம் ராஜா அவர்களும் இதில் சந்தோஷ மடைவார்களென்பதில் சந்தேகமில்லை. ஆனால் இந்த நிலைமையானது பல காரணங்களால் இராமநாதபுரமா சேற்றூரா என்று மாதிரி பார்க்கும் நிலைமையில் வந்துவிடும்படியான சந்தர்ப்ப மேற்படக்கூடாதென்ற உணர்ச்சி இடையிலுள்ள பலர்க்கு ஏற்பட்டுவிட்டது. எனவே நிலைமையை சமாளிக்கப் பெரிய மனிதர்கள் முன் வரவேண்டியதாயிற்று. வெற்றி யாருக்கானாலும் போர்டு நிர்வாகத்தில் பெருங்கஷ்டங்களேற்படுதல் நிச்சய மென்ற உண்மையை உணர வேண்டியதாயிற்று. இந்நிலைமை இருதாரத்தாருக்கும் விளக்கப்படவே சமாதானத்தைத் தவிர வேறுவகை யேற்படவில்லை. ராமநாதபுரம் ராஜா அவர்கள் விருப்பத்தைத் தெரிவிக்கவே அந்த அபிப்பிராயத்தை முதிர்ந்த சிங்கம் வரவேற்றுத் தழுவித் தமது பெருந்தன்மையைக் காட்டி மகிழ்ச்சி யடைந்தமை பெருமைப்படத் தக்கதாகும். எப்படியிருந்தாலும் வேற்றுமையின்றி போர்டு நடைபெறக் கூடுமானால் அதில் ஜில்லா வாஸிகள் முழுமையும் மகிழ்ச்சியடைதலும் பெருமைப்படுதலும் இயல்பே யாகும். பிரிவுபட்டு நின்ற இருவரும் ஒன்றிக் கலந்து செய்யும் நிர்வாகம் சாலச் சிறப்புடையதாக இருக்குமென்று எதிர்பார்க்கிறோம்.

உபதலைவர் தேர்தல் தள்ளிவைக்கப்பட்டிருக்கிறது. சேற்றூர்ஜமீந்தாரவர்கள் கூறியிருப்பதிலிருந்து உபதலைவர்ஸ்தானமும்போட்டியில்லாமல் தேர்ந்தெடுக்க ஏற்பாடு செய்யப்படுமென் றுஊகிக்க இடமேற்படுகிறது. எப்படியும் போர்சமாதானமாக நடைபெற வேண்டுமென்பதோன்று. தவிர நிர்வாகம் பொதுஜனங்கட்கு நற்பயனளிக்கும்படியும், பணத்தட்டான இக்காலத்தில் செட்டும் சிறப்புமாகத் திறமையுடன் நிகழும்படியும் செய்யப்படவேண்டுமென்று விரும்புகிறோம்.

முன்னுள்ள போர்டில் அங்கத்தினர் தொகை முப்பத்தாறு. அவர்கள் தாலூகா போர்டுகளாலும் அரசாங்கத்தாராலும் தெரிவு செய்யப்பெற்றனர். இப்பொழுது அங்கத்தினர் தொகை ஐம்பத்திரண்டான துடன் எல்லாரும் ஜில்லாவின் எல்லா பாகத்திலுமிருந்து பொது ஜனங்களால் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கின்றனர். ஆகவே இப்பிரதிநிதிகள்தாம் இந்த ஜில்லாவின் பிரதிநிதிகளென்று கருத நியாயமேற்பட்டுவிட்டது. அங்கு அங்கத்தினர்கள் நடந்துகொள்ளும் முறைகள் அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட பகுதியின் ஜனங்களின் தன்மையையே காட்டுவதாகக் கருதப்படும் நிலைமை யேற்பட்டிருக்கிறதென்பதை ஜனங்களும் அங்கத்தினர்களும் உணர்ந்து நடக்க வேண்டும். அங்கத்தினர்களின் போக்கையும் செயலையும் பொது ஜனங்கள் கவனித்துத் திருத்தக் கடமைப்பட்டிருக்கின்றனர். ஜில்லாவின் நன்மையின் பொருட்டே ஜில்லா போர்டு இருக்கிறது. அதற்கு வரி கொடுப்பவர் எல்லாரும் சேர்ந்து நிர்வாகம்செய்ய முடியாததால் பகுதி பகுதியாகப் பார்த்து அந்த அந்தப் பகுதியின் ஜனங்கட்குப் பதிலாக ஒவ்வொருவரை அனுப்பியிருக்கிறார்கள். இந்த உணர்ச்சியை அங்கத்தினர்களும் பொது ஜனங்களும் மனத்திற்கொண்டு நேர்மையாக நடப்பதென்றால் போர்டும் அதன்பயனும் உன்னத நிலையில் இருக்குமென்பதிலையமில்லை.

### இந்திய ஜனங்கள்.

நம் நாட்டில் ஆயிரத்துக்கு 940 விகிதம் பெண்களிருக்கின்றனர்.

மொத்த ஜனத் தொகையில் 100க்கு 11 பேர்களே பட்டணங்களில் வசிக்கின்றனர்.

ஆண்களில் 1000 க்கு 156 பேர்களுக்கும் பெண்களில் 1000 க்கு 29 பேர்களுக்குமே எழுதப்படிக்கத் தெரியும்.

ஆங்கிலம் தெரிந்தவர்கள் 1000த்தில் 25 ஆண்கள். பெண்கள் மூன்று பேர்.

மொத்தம் இந்தியாவிலிருக்கும் பாஷைகள் 225.

ஆசியத்தில் இந்துக்கள் 682 பேர்; மகமதியர்கள் 222; புத்தர்கள் 36; கிறிஸ்தவர்கள் 18; இதரர்கள் 42 நாடு முற்றிலும் 168138 ஐரோப்பியரிருக்கின்றனர்.

### வருகை.

திவான்பகதூர் அ. மு. மு. முருகப்ப செட்டியாரவர்கள் ரங்கூனிலிருந்து ஜனவரி 9-ந்தேதி சென்னை வந்து சேர்வார்களென்று தெரிகிறது.

### ஓர் நாடகம்.

இவ்வூர் கொப்புடையநாயகி வித்தியாசாலை மாணவ மாணவிகளால் நிகழும் ஆங்கீரச மார்கழி 24ந்தேதி சனிக்கிழமை ஏகாதசி இரவு 9-30 மணிக்கு ஷெ வித்தியாசாலையின் முன் அமைந்திருக்கும் கொட்டகையில் "சுந்தரேசன்" என்னும் ஓர் தேசிய நாடகம் நடத்தப்பெறும் என்று தெரிகிறது.

## காலண்டர்கள் வரவு.

பழனியப்பா எலக்டிரிக் கம்பெனி:- காரைக்குடி பழனியப்பா எலக்டிரிக் கம்பெனியாரால் அனுப்பப்பட்ட இரு காலண்டர்கள் கிடைக்கப் பெற்றோம். இரண்டும் அழகாகப் அச்சிடப்பட்டிருக்கின்றன. அவற்றிலொன்றில் தோகை விரித்தாடும் நீலமாமயிலை உடலுற அணைத்துக் களிப்புறும் முருகன் படமும், மற்றொன்றில் புன்னகை பூப்ப எதுவோ யோசித்த வண்ணம் மார்ந்திருக்கும் ஒரு அழகிய இந்தியப் பெண்ணின் படமும் அமைந்திருக்கின்றன. அன்றி காலண்டர்களில் கம்பனியார்களுடைய உத்தேசத்துக் கேற்பவண்ணம் பற்பல மின்சார விளக்குகளுடையவும் இதர சாமான்களுடையவும் படங்களும் காணப்படுகின்றன.

ந்யூ இந்தியா அஷூரன்ஸ் கம்பனியின் ஜெனரல் ஏஜண்டுகளிலொருவராகிய தேவகோட்டை திரு. டி. வி அருணாசலம் செட்டியாரவர்களின் 1933-ம் வருடத்திய காலண்டர் வரப்பெற்றோம். அது மூன்று கலர்களில் அழகாக அச்சிடப்பட்டிருக்கின்றது; மாதவாரியாகக்கிழித்துவிடத் தகுந்த "ஷீட்டு"களால் காலண்டர் அமைக்கப்பட்டிருப்பது குறிப்பிடத் தகுந்ததாகும். குறித்த ஷீட்டுகட்கு மேலே, விழித்தவண்ணம் சோபாவில் சாய்ந்து கிடக்கும் ஓர் அழகிய பெண்ணின் உருவப்படம் காணப்படுகின்றது.

மதுரையில் பிரபல வெங்கலபாத்திர வியாபாரியான திரு. பெ. சி. சிதம்பரம் நாடாரவர்கள் தம் விலாசம் வியாபாரக் குறிப்புகளாகிவற்றோடு வெளியிட்டிருக்கும் 1933ம்வருடத்து காலண்டர் ஒன்று நம் பார்வைக்கு வந்தது. அதன் நடுவிலிருக்கும் வர்ணப்படம் சாகுந்தலத்திலுள்ள ஓர் காட்சியை ஞாபகமூட்டுவதுகுறிப்பிடத் தகுந்ததாம்.

நவநீத கதா புக் டிபோ:-இரங்கூன் மாண்டு கோமரி தெருவில் 251ம் நம்பர் கட்டிடத்திலிருக்கும் நவீன கதா புக் டிபோ சொந்தக்காரர்கள் அனுப்பிய காலண்டர் ஒன்று நம்மை எட்டிற்று. அது பல்வேறு மையில் அச்சிடப்பட்ட பன்னிரண்டு தனிக்காகிதங்களாலமைந்திருக்கிறது. ஒவ்வொரு மாதத்திலுமுள்ள விசேஷ நாட்கள், ராகு, குளிகை காலங்கள் முதலியவை குறிப்பிடப்பட்டிருக்கின்றன. அன்றி கல்வியின் சிறப்பைக் காண்பிக்கின்ற 12 முதுமொழிகளும் 12 காகிதங்களிலும் காணப்படுகின்றன. தேதி முதலியவைகள் தமிழிலும் ஆங்கிலத்திலும் பொறிக்கப்பட்டிருப்பது குறிப்பிடத் தகுந்ததாம்.

மோதிலால் எம்போரியம்:—காரைக்குடி மோதிலால் எம்போரிய நிர்வாகிகள் அனுப்பிய புது வருடத்திய காலெண்டர் நம் பார்வைக்கு வந்தது. அது2கலரில்அச்சிடப்பட்டிருக்கிறது அதன் நடுவில் ஆழ்ந்தயோசனையோடு உட்கார்ந்திருக்கும் காந்திஜீயின் திருவுருவப்படம் மிளிர்கின்றது.

### இந்தியா மந்திரியின் அறிக்கை.

காங்கிரஸின் அபிப்பிராயம்.

இந்தியா மந்திரி தம்முடைய அறிக்கையால் இந்தியாவில் சீர்திருத்தத்திற்கு அனுகூலமான நிலைமை தோன்றியிருப்பதாகக் கருதுகிறார். இதைக் குறித்து ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியாரைக் கேட்டதற்கு அவர் கூறியதாவது:—

இந்தியா மந்திரியின் கடைசிப் பிரசங்கம் கொஞ்சம் சமரச உணர்ச்சியைக் காட்டுகிறது. ஆனால் காங்கிரசுக்கு நேரிடையான அழைப்பில்லை. காந்திஜியின் பெயரை அவர் உபயோகிக்காது விட்டிருக்கிறார். இந்தியா கோரும் கௌரவமான ராஜிக்கு இந்தியா மந்திரியின் அறிக்கையில் இடமில்லை.

## புதுவயல் சர்க்கிள்.

### ஆதித்ராவிட மெம்பர்.

திருப்பத்தூர்த்தாலூகாபோர்டுபுதுவயல் சர்க்கிள் ஆதித்திராவிடஸ்தானத்துக்கு தென்மாபட்டு திரு. வையாபுரியும்புதுவயல் திரு.முருகனும்அபேக்ஷகாராய்நின்றார்கள். டிசம்பர்17ந்தேதி தேர்தல் நடந்தது. ஜாஸ்தி ஓட்டுக்கள் பெற்ற தென்மாபட்டு வையாபுரி மெம்பராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

ஒருநிருபர்.

### தனவைசிய இளைஞர் உடற்பயிற்சி மகாநாடு.

இம்மகாநாடு பங்குனி மாதத்தில் நடைபெறும். விளையாட்டுப் போட்டி விவரங்கள் அடுத்த வாரம் வெளிவரும் என்று தெரிகிறது. அண்மையில் கூடப்போகும் நிர்வாகக் கமிட்டிக் கூட்டத்தில் மகாநாடு நடக்குமிடம், காலம் முதலியன நிச்சயிக்கப்படுமென்று தெரிகிறது.

ஒரு நிருபர்.

### உடற்பயிற்சி பிரசாரசபை.

கீழசிவற்பட்டி உடற்பயிற்சி சங்கத்தின் ஆதரவின் கீழ் தமிழ் நாட்டிலும் அப்பால் வெளியிடங்களிலும் பிரசாரம் செய்வதற்கான ஓர் உடற்பயிற்சி பிரசாரசபை சித்திரை முதல் வேலைசெய்யத் தொடங்குமென்று தெரிகிறது. அது சம்பந்தமாக இங்கிலாந்தில் நடைபெற்றுக் கொண்டிருக்கும் ஆரோக்கியமும் பலமும் (Health & Strength) என்ற பத்திரிகை நிலயத்தோடு கடிதப் போக்குவரவுகள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. சுமார் இரண்டு வருடங்கள் தீவிர பிரசாரம் செய்த பிறகு ஓர் பலசாலி மகாநாடு நடத்தப்பெறும். தமிழ்நாட்டுக்காக ஓர் உடற்பயிற்சி பத்திரிகை ஆரம்பிக்கப் பெறும் விஷயம் இப்பிரசார சபையின் வெற்றியைப் பொறுத்திருக்கும் என்று தெரிகிறது.

ஒரு நிருபர்

### நாய் மனிதர்

உலகில் ஒருவிதமான நாய் மனிதர்களிருப்பதாக ஒரு பத்திரிகை கூறுகிறது. இவர்களுடைய முகம் சடை நாய்களின் முகத்தைப் போன்றிருக்கிறதாம். உச்சி முதல் உள்ளங்கால் வரையிலும் இவர்களுடைய உடம்பு மயிரால் அடர்ந்திருக்குமாம். இத்தகைய நாய் மனிதர் சீனாவின் தென் கிழக்குப் பகுதிகளிலும், போர்மோசா, ஆர்கு, ஹெய்னன், போர்னியோ, சுமத்திரா, ஜாவா முதலிய இடங்களிலும் காணப்படுகின்றனர். ஆதிகாலத்தில் ஜாவாவிலுள்ள ஒரு ராஜகுமாரி ஒருநாயுடன் சம்பந்தம் வைத்துப் பெற்றதாலேயே இம்மனிதர் தோன்றினர் என்று ஒருகதை சொல்லப்படுகிறது.

### 1938-ல் மதங்களில்லை.

1938-ம் வருடத்துக்குள் ருஷியாவில் எவ்விதமான மதமும் காணப்படலாகாதென்று நடைபெற்று வரும் கடவுள் மறுப்புப் பிரசாரத்தை எதிர்த்துப் போராடிய தற்காக ஆரன்பர்க் பிஷப்பாயெ ஒருவர் ஆறுவருடம் தண்டனையும் 5 வருடம் தேசப்பிரஷ்டமும் விதிக்கப்பட்டுள்ளார்.

### ஒரு பெயரில் மூவர்

ஒரு ஆகாய கிலையத்திலிருந்து 4 ஆயிரம் பவுனை ஏமாற்றி எடுத்துக் கொண்டதற்காக ஒரு வாலிபன் ஜயிலுக்கு அனுப்பப்பட்டான். அவன் பெயரும் ஜட்ஜின் பெயரும், வழக்கை நடத்திய சர்க்கார் வக்கீல் பெயரும் ஸ்கில்லிங் என்பதாம்.



## சாஸ்திரவாதிகளும் மகாத்மாவும்.

மகாத்மாஜீயிடம் சாஸ்திரிகள் பலர் சென்று விவாதம் செய்து அதிகமாகத் தொல்லைப்படுத்தி விட்டார்கள். அது சம்பந்தமாக ஒருநிருபர் எழுதுவதாவது:—

புனா, டிசம்பர், 31.

சாஸ்திரவாதிகளோடும் இதார்களோடு இடைவிடாது வாதம் செய்து மகாத்மாவின் உடல் நிலை கெட்டுவிட்டது. அதன் காரணமாக மகாத்மாஜீ ஓர் கட்டிலில் சாய்ந்து கொண்டிருக்கிறார். ஏனையோர் கீழேஉட்கார்ந்திருக்கின்றனர். இன்று சாஸ்திரவாதம்முடிவுற்றது. சாஸ்திர வல்லுநர் பலர் மகாத்மாவின் மனதைமாற்றிவிட முயன்றும் பலிக்கவில்லை. இறுதியாகமகாத்மாஜீ.யாரும்சாஸ்திரவாதிகளோடுதருக்கம்செய்து வீண் பொழுது போக்க வேண்டா மென்றும் ஆக்க வேலையில் முனைந்து நிற்பதே மேல் என்றும் கூறிவிட்டார்.

வங்காள பிரம்மசாரி பண்டிதரான மோதிலால் ராய் சாஸ்திரவாதத்தில் வெகுவாக மகாத்மாவுக்கு உதவினர். இதனை மகாத்மாஜி பாராட்டி விட்டு அவர் பிரிந்து போகும் போது ஆசி கூறினர். மகாத்மா எழுதியதாவது:-

அன்பான மேதி பாபு,

நீங்களும் உங்கள் சீடர்களும் பல நாட்களாக என்னருகில் உட்கார்ந்திருந்தது மிகுந்த சந்தோஷத்தைக் கொடுத்துக் கொண்டிருந்தது. நீங்கள் தீண்டாமை யொழிப்பதில் காண்பிக்கும் அதிகப் பற்றைக் கண்டு கொண்டேன். நீங்கள் அபிப்பிராயப்படுகின்ற மாதிரி நம உயிருக்கொப்பாகியிருக்கின்ற நம் கொள்கையை விட்டுக் கொடாதிருப்பதோடு வைதீகர்களை நம் பக்கத்துக் கிழுத்துக் கொள்ளவேண்டும். அதற்காக நாம் எவர் மனதையும் புண்படுத்தவும் கூடாது.

### 'நியூ இந்தியா'ப் பத்திரிகை நிறுத்தப்பட்டது.

டாக்டர் பெஸண்ட் 29ந்தேதிமுதல் நியூ இந்தியாப் பத்திரிகையை நிறுத்திவிடத் தீர்மானித்திருக்கிறார். இது 1914-ம் வருஷத்தில் சுய ஆட்சி இயக்கத்திற்குதவுவதற்காக தினசரிப் பத்திரிகையாக ஆரம்பிக்கப்பட்டது. 4 வருஷத்திற்கு முனபுதான் இது வாரப் பத்திரிகையாக மாற்றப்பட்டது. டாக்டர் பெஸண்ட் தமது தேக ஸ்திதியின் காரணமாக அதனைக் கவனிக்கவோ அன்றி அதற்காகப் பாடுபடவோ முடியாதிருப்பதினால் அது நின்றுவிட முடிவு செய்யப்பட்டிருக்கிறது.

### தென்னிந்தியா நிறுத்தப்படும்

சென்னையிலிருந்து வெளியாகிக் கொண்டிருந்த காலணா தினசரி "தென்னிந்தியா" நிறுத்தப்பட்டு விடுமென்றுஅப்பத்திரிகைச்செய்தியால்தெரிகிறது. ஏஜெண்டுகளிடம் அதிகமான பணம் நிலுவை நிற்பதாக சொல்லப்படுகிறது.

### அரிமளத்தில் ப்ரஸிடென்ஸி டபிள்ஸ்பாட்மிண்டன் டோர்னமெண்டு.

அரிமளம் சித்தி விநாயகர் பாட்மிண்டன் க்ளப் ஆதரவில் ப்ரஸிடென்ஸி டபிள்ஸ் பாட்மிண்டன் டோர்னமெண்டு 16-1-33-ந் தேதி முதல் ஆரம்பம் 8-1-33 ந் தேதிக்குள் டீம்களை அனுப்ப இஷ்டமுள்ளவர்கள் ரூ. 2 பிரவேசக்கட்டணத்துடன்அனுக்களை அனுப்பவேண்டுமென காரியதரிசி அறிவிக்கிறார்.

## ஜில்லா போர்டுத் தலைவர் தேர்தல்.

### இராமநாதபுரம் ராஜாவுக்குப் போட்டியில்லை.

இராமநாதபுரம் ஜில்லா போர்டுத் தலைவர் ஸ்தானத்துக்கு சேற்றூர் ஜமீந்தாரும் இராமநாதபுரம் ராஜாவும் போட்டி போடுவார்களென்றெதிர் பார்க்கப்பட்டது. சென்ற ஞாயிறன்று கனம் பி. டி. ராஜன் அவர்கள் மதுரை வந்து பேசிப்பார்த்தனர். சமாதானத்திற்கு இடமில்லையென்ற நிலைமையில் திரும்பிவிட்டார்கள். ஆனால்மீண்டும்செவ்வாயன்று மதுரை வந்தார்கள். இவ்விருவர்களில் யார் தோல்விபடைகிறார்களென்று பார்க்கக்கூடாதென்றும்; இரண்டொரு ஓட்டு வித்தியாசத்தில் யார் வெற்றி யடைந்தாலும் போர்டு நிர்வாகம் சீர்பெற நடக்கமுடியாதென்றும் அடுத்தடுத்த இரண்டு ஜில்லாக்களின் நிலைமை கஷ்டத்திலிருக்க நேருமானால் மதிப்புக் குறைவாகுமென்றும் இருதாரத்தினரிடமும் எடுத்துக்கூறினர் ணம் செய்தனர். கனம் ராமநாதபுரம் ராஜா அவர்களைத் தலைவர் ஸ்தானத்துக்கு சேற்றூர் ஜமீன்தாரவர்கள் பிரேரணை செய்தார்கள். சிவகெங்கை ராஜா அவர்கள் ஆதரித்தார்கள். போட்டியில்லை. ஆகவே ராமநாதபுரம் ராஜா அவர்களை தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். திருவாளர்களான டி.ஸி. சீனிவாசய்யங்கார் உக்கிரபாண்டியன் பிள்ளை, சேற்றூர் ஜமீன்தார் எம். ஆர். முருகப்ப செட்டியார், எம். சிதம்பர நாடார், எம். பொன்னுசாமி பிள்ளை ஆகியவர்கள் ராஜா அவர்கள் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டதைப்பற்றிப் பாராட்டிப் பேசினார்கள். கலெக்டர் துரையவர்கள் ராஜாவைப்பாராட்டிச் சில உரை பகர்ந்தார். பலர் ராஜாவுக்கு ஏராளமான மாலை யணிவித்தார்கள். பெருந்த குதூகலத்துடன் முடிந்தது.



இராமநாதபுரம் ராஜா
R. ஷண்முக ராஜேஸ்வர சேதுபதி அவர்கள்

கள். இதன்மேல் பகல் 3-மணிக்கு கனம் ராமநாதபுரம் ராஜா அவர்கள் சேற்றூர் ஜமீந்தார் பங்களாவுக்கு விஜயம் செய்தனர். தம்முடன் போட்டி போடாமல் தமக்கே இந்த ஸ்தானத்தை விடவேண்டுமென்று இராமநாதபுரம் ராஜா அவர்கள் தெரிவித்தார்கள். சேற்றூர் ஜமீன்தாரவர்களும் இணங்கினார்கள். கனம் ராஜன் மாலை எக்ஸ்பிரஸில் சென்னைசென்றார்.

நேற்று சரியாக மூன்று மணிக்குக் குறிப்பிட்டபடி மீட்டிங் ஆரம்பமாயிற்று. ஐம்பத்திரண்டு மெம்பர்களும் ஆஜராயிருந்தனர். விஸிட்டர்கள் சுமார் 100 பேர் வரை விஜயம் செய்திருந்தனர். இராமநாதபுரம் ஜில்லாக் கலெக்டர் கிரே துரை தலைமை வகித்தார். எல்லா அங்கத்தினரும் ஒவ்வொருவராக ராஜ விசுவாசப் பிரமா

பின்னர் 5-மணிக்கு உபதலைவர் தேர்தலுக்காக மீண்டும் போர்டு கூடியது. சேற்றூர் ஜமீன்தாரவர்கள் "வைஸ் பிரஸிடெண்டு ஸ்தானத்திற்குப் பலர் பெயர் பிரேரணை செய்யப்படக் கூடுமென்று தெரிகிறது. போட்டியில்லாமல் முடிக்க வேண்டுமென்று முன்வந்திருக்கும் நாம் இந்த சந்தோஷகரமான சமயத்தை அடுத்துப் போட்டியில் கலந்து தேர்தல் நடத்துவதைக் காட்டிலும் இன்னொரு தினத்திற்கு ஒத்திவைப்பதே நல்லது" என்று தெரிவித்தார்கள். யாரும் இதை ஆக்ஷேபிக்க வில்லை. கூட்டம் தேதி குறிப்பிடாமல் ஒத்திவைக்கப்பட்டது. 7-8-பேர் விரும்பக் கூடுமென்று கருதப்படுகிறது:

நிருபர்

## தந்திச்செய்தி.

பிளும்கு. ஜன. 3—

சென்னை உண்டியல் விலை—நூற்றி ஐம்பத்திரண்டு வெள்ளி எழுபத்தைந்து செண்டு.

ஈயம் விலை-எழுபத்தைந்து வெள்ளி எழுபத்தைந்து செண்டு.

ரப்பர் விலை—எட்டு வெள்ளி அறுபது செண்டு.

ரங்கூன், ஜனவரி, 3—

| | |
|---|---|
| படகு நெல் | 68 |
| ரயில் நெல் | 64,66 |
| பெரிய பழைய மில்லரிசி ஸ்பெஷல் | 180 |
| பெரிய புதிய மில்லரிசி ஸ்பெஷல் | 170, 172-8 |
| நசேன் சிறிய மில்லரிசி புதிது | 185 |
| நசேன் பழைய சிறிய மில்லரிசி | 195, 197-8 |
| நசேன் எஸ். க்யூ.(பழையது) | 207-8 |
| நசேன் எஸ். க்யூ. புதிது | 195 |
| பழைய மீடான் பஜார் | 225 |
| மீடான் பஜார் புதிது | 215, 220 |
| ரெடி புழுங்கல் மில்சார் மார்கட் பழையது | 205, 220 |
| மில்சார் புதிது | 205, 220 |
| நசேன் பழையது | 200, 215 |
| நசேன் (Two) | 195, 210 |
| பவுன் | 19—0—0 |
| தவணை வட்டி | 0—8—6 |
| கடப்பு வட்டி | 0—9—0 |

## கப்பற் செய்தி.

கப்பல்கள் நாகப்பட்டினத்திலிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும் விவரம் வருமாறு:—

| கப்பல் பெயர் | புறப்படுந்தேதி |
|---|---|
| ரஜூலா | 7—1—33 |
| ரோனு | 21—1—33 |

கப்பல்கள், மலாய் நாட்டிலிருந்து நாகப்பட்டினத்துக்கு வரும் விவரம்:

| கப்பல் | வருந்தேதி |
|---|---|
| ரோனு | 11—1—33 |
| ரஜூலா | 25—1—33 |

### சிசுக்களைத் தின்னும் சிறுவன்

சான் லை குவா என்னும் 15 வயதுள்ள ஒரு சிறுவன் ஸ்வட்டோ. என்னும் இடத்தில் நரமாமிசம் அருந்திய குற்றத்திற்காக அடைக்கப்பட்டுள்ளான். ஸ்வட்டோவின் அருகிலுள்ள ஓர் கிராமத்தில் அவன் வசித்து வந்தான். அதேசமயம் குழந்தைகள் மாயமாய் மறைந்தன. திடீரென்று ஒரு நாள் அச்சிறுவனுக்கு மருமகன் முறையுடைய குழந்தை ஒன்றும் காணாமல் மறைந்தது. பின்பு அச்சிசுவின் மாம்சம் காத்தில் ...ருக்காறு நெல் வயலில் பிடிபட்டான். அச்சிறுவன் தான் செய்ததை ஒப்புக் கொண்டான். இச்செய்தியை அறிந்த அச்சிறுவனின் தாய் மனத்துயரால் தற்கொலை புரிந்து கொண்டாள். ஆனால் அவனுடைய தகப்பனோ கிராமவாசிகளுடன்சேர்ந்துதனதுகுமாரன்மரணதண்டனையடைய வேண்டுமென முறையிடுகிறான். இத்தகைய பழிச்செயல்கள் சீன தேசத்தில் நிகழ்வது அபூர்வமே. பொதுவாகச் சென்ற சில வருடங்கள் வரை திருடர்களும் கடற் கொள்ளைக் காரர்களும் வீரம் வாய்ந்த விரோதிகளின் இருதயத்தை உண்பது ஓர் வழக்கமா யிருந்து வந்தது. இவ்வாறு செய்ததால் விரோதி ஒருவனின் வீர உணர்ச்சி உண்பவரின் உள்ளத்தில் பாய்ந்து பெருகு மென்பதே அதன் கருத்தாகும்.

### திருப்பதி மலைமீது ரயில்.

ஒரு பூனா என்ஜினியரிங்கம்பெனி திருப்பதி மலைமீது ஒரு சிறு ரயில் தொடரை நடாத்தத் தீர்மானித்துள்ளது. சந்திரகிரி ரயில்வே ஸ்டேஷனிலிருந்து லைன் ஆரம்பமாகும். இப்போது அதனை முன்னிட்டு ஸர்வே நடைபெற்று வருகிறது. கம்பெனி உத்தியோகஸ்தர்கள் இப்போது மலைமீது முகாம் போட்டிருக்கின்றார்கள்.

## ஜட்ஜுகள் இட மாற்றம்.

**சென்னை கெஜட் அறிக்கை.**

திருச்சி ஜில்லா ஜட்ஜாகவும்செஷன்ஸ் ஜட்ஜாகவுமிருந்த மிஸ்டர் எஸ். பர்ன் ஐ. சி. எஸ். சென்னை ஹைகோர்ட் ஜட்ஜாக இன்னொரு உத்தரவு பிறப்பிக்கப்படுகிறது வரையிலும் (ஜனவரி 2-ந்தேதி முதல்) வேலைபார்ப்பார்.

0 0 0

மதுரை திரு. டி. எம். முருகேசபிள்ளையவர்கள் மதுரை ஜில்லா கோர்ட் எல்லைக்குள் ரிசிவராய், 1933, ஜனவரி 1-ந் தேதி முதல் வேலை பார்ப்பார்.

0 0 0

தேவகோட்டையில் ஆக்டிங் சபார்டினேட் ஜட்ஜாயிருக்கும் கெ. எம். கிருஷ்ணகுரூப் அவர்கள் இடம் மாற்றப்பட்ட திரு. யு: ராமப்பாவுக்குப் பதிலாக பாலக்காடு சப்கோர்ட்டில் வேலை பார்ப்பார்.

0 0 0

தேவகோட்டை சப்கோர்ட்டில் ஆக்டிங் சபார்டினேட் ஜட்ஜும் அடிஷனல்சபார்டினேட்ஜட்ஜுமாக விருந்த மிஸ்டர் கெ. பார்த்தசாரதி ஐயங்கார் அவர்கள் அங்கேயே பிரின்சிபல் சபார்டினேட் ஜட்ஜாக உயர்த்தப்பட்டிருக்கிறார்.

0 0 0

ராஜமகேந்திரம் சப்கோர்ட்டில் அடிஷனல்சபார்டினேட்ஜட்ஜும்ஆக்டிங்சபார்டினேட் ஜட்ஜுமாகிய திரு. எம். கிருஷ்ணமாசாரியார் தேவகோட்டை சப்கோர்ட்டில் அடிஷனல் சபார்டினேட் ஜட்ஜாக வேலை பார்ப்பார்.

---

## பினங்கில் நகரத்தார் கலாசாலை.

பினங்கில் நகரத்தார் விடுதி யொன்று ஏற்படப் போவது போலவே (இப்போது தாற்காலிகமாய் ஏற்பட்டுளது) ஓர் நகரத்தார் கலாசாலையும் ஏற்படுத்தப்பட வேண்டுமென்ற அபிப்பிராயம் கிளர்ந்துளது. அதனைப்பற்றி'' 'ஈபோ தனவைசியர்' என்ற பெயர் போட்டெழுதியிருக்கும் ஒரு கட்டுரையின் சாரமாவது:—

மலாயாவில் நகரத்தார்களுக்கு அதிகம் தேவையாக விருந்தது ஓர் சங்கம். அச்சங்கம் இப்போது பல விடங்களில் ஏற்படுத்தப்பட்டு நன்கு வேலை செய்துவருகிறது. அது சாதித்துள்ள காரியங்கள் பல.

இரண்டாவது தேவையாக விருந்தது பினங்கில் ஓர் நகரத்தார் விடுதி. அதற்கான ஏற்பாடுகளும் திரு. முத்துப்பழனியப்ப செட்டியாரின் நன்முயற்சியால் நடைபெற்று விட்டன. அதற்கறிகுறியாக பினங்கு சைனா ஸ்திரீட்டில் தாற்காலிக விடுதி திறக்கப்பட்டு விட்டது.

மூன்றுவதாக நகரத்தார்களுக்கு வேண்டியது ஓர் கலாசாலை. இதற்கான முயற்சியும் நடைபெற்று வருகிறது. அம்முயற்சியின் ஓர் அங்கமாக நகரத்தார் இளைஞர்களால் நடத்தப்பட்டு வரும் நாடக சபையைக் கூறலாம். அச்சபை அதிகமான பொருளை சேர்த்திருக்கின்றது. அதோடு சோமா தேவி குருகுலத்துக்காக வசூல் செய்த பணத்தையும் உபயோகிக்க வேண்டுமென்ற அபிப்பிராயம் பலர்க்கு இருந்து வருகிறது. திரு. முத்துப்பழனியப்ப செட்டியார் இதிலும் சேர்ந்து முயற்சி செய்வது பாராட்டத்தகுந்தது.

---

## கல்கத்தாவில் திருடரின் தீரம்.

### இரு வியாபாரிகள் குத்துண்டனர்.

இரண்டு மார்வாடிகள் இரவு 10 மணிக்கு பணத்துடன் வீட்டுக்குத் திரும்பி போய்க் கொண்டிருக்கும்பொழுது ஒருவரைக் குத்தி, படுகாயப்படுத்தி, பணத்தை யபகரிக்க முயன்றான். மற்றொருவர் கூச்சலிடவே அவரையும் குத்திவிட்டு ஓட்டம் பிடித்தான். ஆனால் ஜனங்கள் தொடர்ந்து ஓடி, திருடனைப் பிடித்துவிட்டார்கள். காயமுண்டவர்களில் ஒருவர் வழியிலேயே இறந்தார். மற்றொருவர் ஆஸ்பத்திரியில் கிடக்கிறார்.

### 30 திருடர்களின் கூட்டம்.

24 பரிகாணங்களில் ஆயுதம் தாங்கிய 30 திருடர்கள் ஒரு வீட்டில் புகுந்து, சொந்தக்காரனை யடித்து, கிடைத்ததை எல்லாம் அடித்துக்கொண்டு போயினர்.

---

## விளம்பரம்.

அறுமந்தங்குடி தாலூகா. கஸ்பா தேவகோட்டையிலிருக்கும் வீர. அ. அடைக்கப்ப செட்டியார் ஸம்சாரம் வள்ளியம்மை ஆச்சி இதனால் சகலருக்கும் அறிவிப்பது என்னவென்றால்:—

என்மகன் மைனர் திருநாவுக்கரசு என்ற அடைக்கப்பன் பிங்கள வருஷம் ஆனி-மீ 14 தேதிக்கு 27-6-17ல் பிறந்தவன். இன்னும் ஷையான் Majority அடையவில்லை. சிறுவர்களை கெட்ட வழிகளில் செலுத்தி அவர்களைக்கொண்டு காசுபறிக்கும் சிலதுஷ்டர்கள், என்மகன் திருநாவுக்கரசு என்ற அடைக்கப்பனைக்கொண்டு எவ்வித பிரதி பிரயோசனமும் ஷை என் மகன் அடையாமலும், அல்லது சொல்பத் துகைகளை மட்டும் அவனுக்குக் கொடுத்தும் பெருந்துகைக்கு தங்கள் பேருக்கோ தங்களுக்கு உடந்தையா யிருப்பவர்கள் பேருக்கோ தெஸ்த வேஜுகள் எழுதி வாங்கியிருப்பதாகத் தெரிகிறது. என்மகன் மைனர். எங்கள் குடும்ப காரியங்களை நானே பார்த்துவருகிறேன். ஷையானுக்கு வேண்டிய செலவுக்கும் நான் அவ்வப்போது துகைகள் கொடுத்தும் வருகிறேன். அவன்கடன் வாங்க எவ்வித அவசியமுமில்லை. அவனுக்கு யார்கடன் கொடுத்தோ கொடுக்காமலோ எவ்வித தெஸ்த வேஜு எழுதிவாங்கி யிருந்தாலும் எழுதி வாங்கினாலும் செல்லக்கூடியதில்லை.

இப்படிக்கு,
இந்த—கீரல்,
வீர. அ. வள்ளியம்மை ஆச்சி.

---

## நோட்டிஸ்.

தேவகோட்டை டி. முன்சீப் கோர்ட்டு.

1932-ளு S. C. No. 361.

குருந்தம்பட்டு பழ. ஆத. அழகு அம்பலம் } வாதி.

ஷையூர் காளிமுத்துப் பிள்ளை மகன் பொன்னய்யா பிள்ளை } 1-வது பிரதிவாதி.

ஷை 1-வது பிரதிவாதி என்பருக்கு இதன் மூலம் தெரிவிப்பதாவது:—

ஷை வாதி என்பருக்கு தாம் 16-11-27-ந்தேதியில் ரூ. 55-0-0-க்கு எழுதிக் கொடுத்திருக்கிற பிரோம்சரி நோட்டுப்படி செல்லவேண்டிய அசல் வட்டித் துகை ரூ. 83—1—3-க்கு ஷை நிம்பரில் பிறது செய்திருப்பதில் உமக்கு Substituted serviceக்கு ஆர்டராகி வாய்தா 14—1—33-ந்தேதி போடப்பட்டிருக்கிறது. ஷை வாய்தாவில் காலை 10 மணிக்கு கோர்ட்டு முன் நீர் ஆஜராகி ஆக்ஷேபணை யிருந்தால் தெரிவித்துக்கொள்ளலாம். தவறினால் உம்மை எக்ஸ்பார்ட்டி செய்து வாதி பக்கம் தீர்மானிக்கப்படுமென்பதை அறியவும்.

S. Srinivasaraghavan,
தேவகோட்டை. 2—1—33. } வாதி வக்கீல்.

---

## ரயில் வண்டிப் போக்கு வரவு.

### திருச்சி—மானமதுரை.

| | | 25 நிர் பாசஞ் | 1 நிர் மெயில் | 27 நிர் பாசஞ் | 29 நிர் பாசஞ் | 33 நிர் மிக்சட் | 31 நிர் பாசஞ் | தனுஷ் எக்ஸ் |
|---|---|---|---|---|---|---|---|---|
| திருச்சி ஜங் | புறப் | 3-50 | 7-45 | 11-0 | 13.25 | ........ | 17-20 | 21-55 |
| காரைக்குடி | வரும் | 6-24 | 10-10 | 13-37 | 16-13 | ........ | 20-5 | 0-25 |
| | புறப் | 6-30 | 10-20 | ........ | 16-35 | 17-35 | ........ | 0-33 |
| மானமது | வரும் | 8-18 | 12-6 | ........ | 18-30 | 20-15 | ........ | 2-15 |
| | புறப் | 9-30 | 12-26 | ........ | 18-40 | ........ | ........ | 2-29 |

### மானமதுரை—மதுரை.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| மானமதுரை | புறப் | 0—30 | 8—0 | 10—54 | 15—35 | 18—5 |
| மதுரை | சேர் | 2-10 | 9—20 | 12—2 | 17—52 | 19—50 |

### மானமதுரை—திருச்சி.

| | | 32 நிர் பாசஞ் | 30 நிர் மிக்ஸட் | 34 நிர் பாசஞ் | 2 நிர் மெயில் | 26 நிர் பாசஞ் | தனுஷ் எக் |
|---|---|---|---|---|---|---|---|
| மானமதுரை | புறப் | .... | 5-55 | 9-35 | 14-46 | 18-6 | 22-42 |
| காரைக்குடி | வரும் | .... | 8-39 | 11-31 | 16-28 | 19-54 | 0-27 |
| | புறப் | 6-45 | 8-53 | 11-40 | 16-34 | 20-7 | 0-36 |
| புதுக்கோட்டை | வரும் | 7-49 | 10-5 | 12-55 | 17-36 | 21-11 | 1-37 |
| திருச்சி (ஜங்) | வரும் | 9-37 | 11-43 | 14-38 | 18-55 | 22-41 | 3-2 |

### மதுரை—மானமதுரை.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| மதுரை | புறப் | 5-0 | 8—29 | 13—43 | 18—40 | 22—45 |
| மானமதுரை | சேர் | 6-40 | 9-55 | 15—55 | 20—5 | 0-5 |

---

## நோட்டிஸ்.

தேவகோட்டை டி. மு. கோர்ட்டு.

1932-ளு O. P. நிர். 67.

எழுவங்கோட்டை தாலூக்கா புதுவயலில் இருக்கும் சேதுராமன் செட்டியார் குமாரர் ப. செ. பள. சே. பழனியப்ப செட்டியார் } மனுதார்.

ஷை மனுதார் தாயார் மீனாக்ஷி ஆச்சி பிரஜோத்பத்தி-ளு பங்குனி-மீ 31உ க்கு 12-4-32-ந்தேதி காலம் சென்றுவிட்டாள் என்றும் ஷை லேட் மீனாக்ஷி ஆச்சிக்கு ஷையாள் குமாரன் ஷை மனுதார்தான் வார்சு யென்றும் மனுவில்கண்ட கடனை வரப்பற்ற தனக்கு வார்சு சர்ட்டிபிகேட் வேணுமாய் ஷை கோர்ட்டில் ஷை நம்பரில் மனுச செய்து 18—1—1933-ந் தேதிக்கு வாய்தா யேற்பட்டிருக்கிறது. ஆக்ஷேபணை உள்ளவர்கள் ஷை தேதி பகல் 10 மணிக்கு கோர்ட்டில் ஆஜராகி தங்கள் ஆக்ஷேபணைகளை தெரிவித்துக் கொள்ளவும். தவறினால் ஒருதலை பக்ஷமாக தீர்மானம் பெறப்படும் என்பதை அறியவும்.

M. R. Sivarama Iyer,
Vakil,
3—1—33.

## நோட்டிஸ்.

தேவகோட்டை சப் கோர்ட்டு.

1929 ளு I. P. No. 8.

1932 ளு I. A. 43 and 44.

முரு. நா. மு. முருகப்பசெட்டியார் } மனுதார் இன்ஸால்வெண்டு

1. புளியம்மாள்
2. ஏகாம்பரம் } எதிர் மனுதார்கள்.

ஷை நிம்பர் மனுதார் தன்னை டிஸ்சார்ஜு செய்து டிஸ்சார்ஜு ஆர்டர் கொடுக்க வேண்டுமாய் மனுதாக்கல் செய்து 7—1—32 உ வாய்தா யேர்ப்பட்டிருக்கிறது. ஏதும் ஆக்ஷேபணையுள்ளவர்கள் மேற்படி வாய்தாவில் ஆஜராகி தெரிவித்துக்கொள்ள வேண்டியது.

R. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்.
29—12—32 தேவகோட்டை } மனுதார் வக்கீல்

## நோட்டிஸ்.

தேவகோட்டை டி. மு. கோர்ட்டு.

1932ளு O. P. நிர் 68.

எழுவங்கோட்டை தாலூக்கா பள்ளத்தூரில் இருக்கும் கருப்பஞ் செட்டியார் சம்சாரம் சொ. முரு. கரு. வள்ளியம்மை ஆச்சி. } மனுதார்

ஷை மனுதார் தன் புருஷன் கருப்பஞ் செட்டியார் 16—10—32-ந்தேதி வாக்கில் தன்னை விட்டு இறந்து விட்டார் என்றும் ஷை மனுதார் தான் லேட் கருப்பஞ் செட்டியாருக்கு வார்சு என்றும் மனுவில் கண்ட கடனை வசூல்செய்ய வார்சு சர்ட்டிபிகேட் பெறவேணும் என்றும் ஷைநம்பரில் மனுக்கொடுத்து 23—1—33-ந் தேதி வாய்தா யேற்பட்டிருக்கிறது. ஆக்ஷேபணை உள்ளவர்கள் ஷை கோர்ட்டில் ஷை தேதியில் பகல் 10மணிக்கு ஆஜராகி தங்கள் ஆக்ஷேபணைகளைத் தெரிவித்துக் கொள்ளவேணும். தவறினால் ஒரு தலை பக்ஷமாக தீர்மானம் பெறப்படும் என்பதை அறியவும்.

M. R. Sivarama Iyer,
Vakil,
3—1—33.





# அறிவியல் கலை அபிவிருத்தி.

## 1500 கோடி காண்டல் பவர் வெளிச்சம்.

## சூக்கும உலகிற்கு வாணவிமானம்.

**செவ்வாய்க்கு வெளிச்சம்.**

நீண்ட நாளாக அறிவியற்கலைஞர்கள் செவ்வாய்க்கிரகத்தோடு சம்பந்தம் ஏற்படுத்திக்கொள்ள வேண்டுமென்றும், அங்கு பூமியைப் போலவோ அதை விட மேம்பட்டோ மக்கள் வசிக்கின்றார்களாவென்று தெரிந்துகொள்ள வேண்டு மென்றும் ஆசைப்பட்டுக் கொண்டிருக்கின்றார்கள். இப்போது அதற்கான முயற்சி கைகூடப்போகின்றது. விஞ்ஞானிகள் ஸ்விட்ஜர்லாந்திலுள்ள ஆல்ப்ஸ் மலையிலிருந்து ஒளி காட்டும் முறையை சமீபத்தில் கையாளுவார்கள். அம் மலையின்மீது வான சாஸ்திர அறிவிற்குரிய பெரும் பெரும் நிலையங்கள் கட்டப்பட்டுள்ளன. அவற்றில் பெரிய மின்சார விளக்குகளை வைத்து அவற்றை ஒன்று யிணைத்து வானை நோக்கிச் செலுத்தத் தீர்மானித்துள்ளார்கள். உலகில் பெயர்போன ஸ்மெத்விக் மின்சாரக் கம்பெனிக்காரர்கள் அதற்கான விளக்குகளைத் தயாரிக்க விசைந்துள்ளார்கள். இப்போது ஆல்ப்ஸ் மலையில் மூன்று கூட்டங்களாக ஒளி நிலையங்கள் கட்டப்பட்டுவிட்டன. இம் மூன்று நிலையத்து வெளிச்சங்களும் ஒன்றாய்ச் சேர்ந்து வானை நோக்கிப் பிரகாசித்தால் 1500 கோடி காண்டல் பவருள்ள வெளிச்சம் உற்பத்தியாகுமாம். இதுவே உலகில் இதுவரையிலும் உற்பத்தி செய்யப்பட்ட வெளிச்சத்தில் மிகப்பெரிது. இவ்வெளிச்சம் செவ்வாய்க்கும் நமக்குமிடையிலுள்ள 3 கோடி 40 லட்சம் மைல் தூரம் போக வேண்டும். ஆ! என்ன அதிசயம்.

மேற்சொன்ன வெளிச்ச நிலையங்களை ஆல்ப்ஸ் மலையில் நிறுவிய பின்னர் உலகிலுள்ள தூர தர்சினி நிலையங்களெல்லாம் செவ்வாயை நோக்கி யிருக்கும்படி தகவல் கொடுக்கப்படும். அதோடு செவ்வாயிலிருந்து பதில் வருகின்றதா வென்று பார்த்துக்கொள்ளவும் நிபுணர்கள் நியமிக்கப்படுவர்.

**ஐந்து டன் குளோரோபாரம்.**

இங்கிலாந்தில் மிருகச் சிகிச்சை செய்யும் ஒரு ஆஸ்பத்திரியில் வருஷா வருஷம் 5 டன் குளோரோபாரம் செலவு செய்யப்படுகின்றது. அத்தனையும் மிருகங்களின் வயிற்றிலிருக்கும்அபாயகரமான கழிவு பொருட்களை வெளியே யெடுப்பதற்காகவே உபயோகிக்கப்படுகின்றதாம். நாய்க்குட்டிகள் ஆணி, கற்றுண்டுகள், கிராமபோன்ரிக்கார்டுகள்ஆகியவற்றைத்தின்று விடுகின்றன. சமீபத்தில் ஷை ஆஸ்பத்திரியில் ஒரு நாயின் வயிற்றுக்குள்ளிருந்து 12 அங்குலம் நீளமுள்ள ஒரு ஊசி யெடுக்கப்பட்டது. டிக்ஸி என்ற ஒரு நாய் ஒரு கண்ணாடித் துண்டு, ஒரு கார்க், ஒருசேப்டிபின், ஒரு பொடி டப்பி, கடைசியாக அதன் லைசென்ஸ் ஆகியவற்றை விழுங்கி விட்டது.

**அலுமினியம் அழியலாம்.**

புதிதாகக் கண்டு பிடிக்கப்பட்டிருக்கும் பெரிலியம் என்ற உலோகம் அலுமினியத்தைத் துரத்திவிடக் கூடுமென்றெதிர்பார்க்கப்படுகிறது. பெரிலியம் நல்ல வெண்மை நிறமாயிருப்பதோடு எஃகு போன்ற உறுதியும் பெற்றிருக்கின்றது. உலோகாராய்ச்சி நிலய மொன்று இப்புதிய உலோகத்தைப் பலபட பரீட்சித்து வருகின்றது. சிலர் இவ்வுலோகம் உடையும் தன்மை பெற்றிருக்கின்றதென்று ஆட்சேபம் கூறுகிறார்கள். ஆனால் அதனை யொரு கலப்புப் பொருளாகி உபயோகித்தால் குறை நீங்கிவிடு மென்பது நிபுணர்கள் அபிப்பிராயம். ஆகவே சின்னாட்களுக்குள் அலுமினியம் அழிந்து போகலாம்.

**வாண விமானப் பிரகடனம்.**

நீண்ட நாளாக விஞ்ஞானிகள் கனவு கண்டு வரும் வாண விமானம் தற்போது நிஜமாகிவிட்டது.

பர்லின் எஞ்ஜினீயராகிய ஹெர் நெபெல் என்பவர் ஒரு வாண விமானத்திலேறி 3000 அடி உயரம் சென்று அப்பால் தாமாக இயக்கும் பாரசூட் (குடை) யினுதவியால் பூமிக்கு இறங்கிவர உத்தேசித்திருக்கிறார். அதற்காக அவர் விமானத்திற்குபயோகிக்க நினைப்பது சிறிது மாற்றப்பட்ட அல்கஹாலும் பிராணவாயுவுமாம்.

இப்பிரயாணம் வெற்றிகரமாய் முடிந்த பிறகு எஞ்ஜினீயர் நெபல் பன்னிரண்டு மைல் தூரம் பறந்து சென்று ஸ்ராட்டோஸ்பியர் என்ற மேல் வானத்தை (சூக்கும உலகம்) பரிசோதனை செய்வார்.

இத்தகைய, நெபலின் முதற் பிரயாணத்தை உள்நாட்டு அதிகாரிகள் சம்மதித்து விட்டார்கள். உள்நாட்டு முனிசிபாலிடியார் அவரை ஊக்குகின்ற முறையில் 800 பவுன் கடன் கொடுக்க விசைந்துள்ளார்கள். திரு. நெபலின் பிரயாணத்தின் மொத்தச் செலவு 800 பவுனே.

---



## வண்ணாத்திப்பூச்சிகள் தேவை.

ஜர்மன் சர்க்கார் 2 லட்சம் வண்ணாத்திப்பூச்சிகள் தேவையென்று விளம்பரம் செய்திருக்கிறார்கள். சாயம் எடுக்கும்விஷயத்தைப் பற்றி பரிசோதனை செய்வதே இவ்விளம்பரத்தின் நோக்கமாம். வண்ணாத்திப் பூச்சிகளில் பலஎவ்விதமான சாயம் தரும் பொருளுமில்லாதிருக்கின்றன.

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

விடுவதன் மூலம் இக்கடமை நிறைவேறும்.

### கேளப்பன் விரதம்.

இந்த ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கும் பொழுது ஸ்ரீ கேளப்பன் குருவாயூர் கோயிலில் ஹரிஜனங்களுக்கு அனுமதி பெறுவதற்காக உண்ணாவிரதம் அனுஷ்டித்து வந்தார். ஜாமொரின் யோசனைப்படி, அவர் உண்ணாவிரதத்தை நிறுத்திவைக்கும்படி நான் கேட்டுக் கொண்டேன். இந்த எர்ரவாடா ஒப்பந்தத்தை பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் ஏற்றுக்கொண்ட பொழுது இந்த ஒப்பந்தத்தை நிறைவேற்றி வைப்பதற்கு என்னை அடமானமாக வைத்துக் கொள்ளும்படி டாக்டர் அம்பேத்காருக்கு உறுதி கூறி, என் ஹிருதயத்தில் இரகசிய பிரமாணம் ஒன்று செய்து கொண்டேன். ஆகவே தீண்டாமையைத் தொலைக்க வேண்டியதற்கு, நான் எந்த ரூபத்தில், எந்த அளவுக்காவது என் முயற்சியைக் குறைத்துக் கொண்டாலும் உண்ணாவிரதத்தை அறவே விட்டொழித்தாலும் ஒரு பிரமாணத்தை மீறி, ஹரிஜனங்களைக் காட்டிக் கொடுத்த தோஷத்திற்கு நான் உள்ளாவேன். தீண்டாமையை வேருடன் தொலைக்க, என்னைப்போல் உயிரைக் கொடுத்தும், தொண்டாற்றக் கூடிய ஆயிரக்கணக்கான ஹிந்து சீர்திருத்த வாதிகள் இருக்கிறார்கள் என்பதை வாயில்லாதவர்களும் அனாதைகளாகவு மிருக்கும் ஹரிஜனங்கள் நம்ப வேண்டுமென்று நான் விரும்புகிறேன். ஹிந்துமதத்தையும் சாஸ்திரங்களையும் போற்றிப் பாதுகாக்க வேண்டுமென்பதில், சநாதன தர்மிகளுக்கு இவர்கள் எவ் வழியிலும் பிற்பட்டவர்கள் அல்லர்.

### தீண்டாமை இறக்கும் வரையில் எனக்கு அமைதியில்லை.

வாயினாலேயோ, அன்றி கைகள் தூக்கியோ எர்ரவாடா ஒப்பந்தத்தை ஆதரித்தவர்கள் முடிவாக தீண்டாமையை ஒழிக்கும் வரையில், எனக்கு அமைதி கிடையாது. தீண்டாமையைத் தகித்துவிட்டு, அதன் திருநீற்றால் தான் இந்து மதம் புத்துயிர் படைத்துப் புனிதமாகி, இப்புவியிலேயே ஓர் அரும் பெரும் சக்தியாக நிலைபெற்று நிற்கவேண்டும்.

---

## சுயமரியாதை வேலைத் திட்டக் கூட்டம்.

சென்றவாரக்குமரனில் அறிவித்திருந்தபடி டிசம்பர் 28 29ம் தேதிகளில் ஈரோடில் தோழர் ஈ. வே. ராமசாமி அவர்கள் வீட்டில் சுயமரியாதை இயக்கவேலைத் திட்டக் கூட்டம் நடைபெற்றது. பல ஊர்களிலிருந்து சுமார் 200 பேர் வந்திருந்தனர். பலர் போகமுடியாமை பற்றிக் காகிதங்களும் தந்திகளும் அனுப்பியிருந்தனர். கூட்டமாரம்பித்தும் தோழர் சிங்காரவேலு அவர்கள் சுயமரியாதை சமதர்ம திட்டத்தைவாசித்துக்காட்டி அதன் அவசியத்தை நீண்ட நேரம்பேசினர். பலர் பலவிதமான தத்தம் அபிப்பிராயங்களைத் தெரிவித்தார்கள். இறுதியில் அடியில் காணும் விஷயங்கள் இயக்கத்தின் இலட்சியங்களாக நிறைவேற்றப்பட்டன:—

### இலட்சியங்கள்.

1. பிரிட்டிஷ் முதலிய எவ்வித முதலாளித் தன்மைகொண்ட ஆட்சியிலிருந்தும் இந்தியாவை பூரண விடுதலை அடையச் செய்வது.

2. தேசத்தின் பேரால் கொடுக்கப்பட வேண்டிய எல்லா கடன்களையும் ரத்து செய்வது.

3. எல்லா தொழிற்சாலைகளையும், ரயில் வேக்களையும், பாங்கிகளையும், கப்பல் படகு நீர் வழி போக்குவரத்து சாதனங்களையும் பொது மக்களுக்கு உரிமையாக்குவது.

4. எந்தவிதமான பிரதிப் பிரயோஜனமும் கொடுபடாமல் தேசத்தில் உள்ள எல்லா விவசாய நிலங்களையும், காடுகளையும் மற்ற ஸ்தாவர சொத்துக்களையும் பொது ஜனங்களுக்கு உரிமையாக்குவது.

5. குடியானவர்களும் தொழிலாளிகளும், லேவாதேவிக்காரர்களிடம் பட்டிருக்கும் கடன்களை யெல்லாம் (கான்சில்) செல்லுபடியற்றதாக ஆக்கி விடுவது. அடிமை ஒப்பந்தங்களை ரத்து செய்துவிடுவது.

6. சுதேச சமஸ்தானங்கள் என்பவைகளை யெல்லாம் மாற்றி இந்தியா முழுவதையும் தொழிலாளிகள் குடியானவர்கள், சரீர வேலைக்காரர்கள் என்பவர்களுடைய நேரடியான ஆட்சிக்குக்கொண்டு வருவது.

7. தொழில் செய்பவர்கள் 7 மணி நேரத்திற்கு மேல் வேலை செய்யக்கூடாது என்பதுடன், அவர்களுடைய வாழ்க்கை நிலை உயர்த்தப்படுவது. தொழிலாளிகளுக்குக் கூலியை உயர்த்தி, அவர்களது சுக வாழ்க்கைக்கு வேண்டிய சவுகரியங்களையும் இலவச நூல் நிலயங்கள் முதலிய வசதிகளையும் ஏற்படுத்துவது. தொழில் இல்லாமல் இருக்கின்றவர்களை சர்க்கார் போஷிக்கும்படியும் செய்வது.

என்பவைகள் சுயமரியாதை இயக்கத்தின் அடிப்படையான லட்சியங்களாகும்.

---

### திருத்தப்பட்டபடி நிறைவேறிய வேலைத்திட்ட தீர்மானம்.

சுயமரியாதை இயக்கமானது தென் இந்தியாவில் சென்ற 7, 8 வருஷ காலமாக பாமர மக்களிடை ஏராளமாய் புதைந்து கிடந்த ஜாதி, மதம் முதலியவைகளைப் பற்றிய குருட்டு நம்பிக்கைகள் மூடப்பழக்க வழக்கங்கள் ஆகியவைகளைப் பற்றியும், பொருளாதார தன்மையின் கீழ் நிலையைப் பற்றியும் செய்து வந்த புரட்சி பிரசாரத்தின் பலனாய் ஒரு பெருத்த உணர்ச்சியைக் கிளப்பிவிட்டிருப்பதாலும்,

பகுத்தறிவுக்கு ஏற்காத முறையில் நடைபெற்று வரும் மேல்கண்ட பழக்க வழக்க முறைகளை சட்ட மூலமாகவன்றி வேறு வழியில் ஒழிப்பது என்பது முடியாது என்கின்ற அபிப்பிராயம் நாளுக்கு நாள் பலப்பட்டு வருவதாலும்,

பாமர மக்களைப் பல அரசியல் ஸ்தாபனங்களும், சமூகக் கட்டுப்பாடுகளும் அந்தந்த விஷயங்களில் அடக்கியும், பொருளாதாரத் துறையில் ஒடுக்கியும், வைப்பதற்கு சாதனமாக அரசியல் ஸ்தாபனங்களே உபயோகப்படுத்தப்பட்டு வருகிறது என்பது ஆட்சேபிக்க முடியாத உண்மையாய் இருப்பதாலும்,

வட்டமேஜை மகாநாட்டின் பயனாய் பாமர மக்களின் பகுத்தறிவு வளர்ச்சிக்கு நாசத்தை உண்டாக்கும் கொடுமையான பழய பழக்க வழக்கங்களுக்கும் மனிதத் தன்மைக்கும் முரணான ஜாதிவித்தியாசங்களும் மற்றும் பல கெடுதிகளும் பாதுகாப்பும், ஆக்கமும் அளிப்பதாய் இருப்பதாலும்,

சுயமரியாதை இயக்கத்தாருக்குள் சமதர்ம (Socialist party) கட்சிஎன்பதாக ஒரு அரசியல் பிரிவை ஏற்படுத்தி, அதற்கு அடியிற் கண்ட திட்டத்தை வகுத்து, அதன் மூலம் பரிகாரம் தேடுவது என்று தீர்மானிக்கப்படுகிறது.

1. பொதுஜன சௌகரியங்களுக்கு ஏற்பட்ட சாதனங்களை தனிப்பட்ட மனிதர்கள் அனுபவிப்ப தென்பதற்கும் ஜாதிமத சம்பந்தமான கொடுமைகளுக்கும் பாதுகாப்புகளாய் இருக்கும் அறிவுக்கு ஒவ்வா முறைகளை ரத்து செய்யவேண்டும்.

பர்மா ஜனங்களை அவர்களது பொருளாதாரக் கொடுமையில் இருந்தும், ஜாதி மதக் கொடுமையில் இருந்தும் விடுவித்தும் சுதந்திர மனிதர்கள் ஆக்குவதற்கும், பொதுஜன அவசியத்திற்கு என்று ஏற்படுத்தப்படுகிற தொழில் முறைகள் போக்கு வரத்து சாதனங்கள் ஆகியவைகளின் நிர்வாகத்தையும் அதன் இலாபத்தையும் தனிப்பட்ட மனிதர்கள் அடையாமலிருப்பதற்கும் வேண்டிய காரியங்களை அரசியல் ஸ்தாபனங்களின் மூலமாகச் செய்யவேண்டும்.

### திட்டங்களாவன—

2. எல்லாச் சட்டசபை, முனிசிபல் தாலூக்கா ஜில்லா சபை ஆகியவற்றின் தேர்தலுக்கு வயது வந்த யாவருக்கும் ஓட்டுரிமை ஏற்படும்படி செய்ய வேண்டும். தனிப்பட்ட தொழிற்சாலைகள், ரயில், கப்பல் முதலியவைகளில் தொழிலாளிகளுக்கு எப்பொழுதும் தொழில் இருப்பதற்கு ஒரு ஜவாப்தாரித்தனத்தையும் அவர்களுடைய வாழ்க்கைக்கு வேண்டிய கூலியத்தை நிர்ணயப்படுத்தி அதற்கு ஒரு உறுதிப் பாட்டையும் செய்வதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.

4. சில சொந்தக்காரர்களாயில்லாமல் விவசாயத்தில் ஈடுபட்ட தொழிலாளிகளுக்கு வெள்ளாமையில் ஒருநியாயமானபங்கு விகிதம் கிடைக்கும்படி செய்யவேண்டும்.

5. கோவில், பிரார்த்தனை இடங்கள் முதலிய மத ஸ்தாபனங்களின் சொத்துக்கள், வரும்படிகள் ஆகியவைகளைப் பொது ஜனங்களின் தொழில், கல்வி, சுகாதார வீட்டு வசதி அனாதைப் பிள்ளைகள் விடுதி ஆகியவைகளுக்கு பயன் படுத்த அனுமதி பெறவேண்டும்.

6. இந்திய சமூகத்தில் ஜாதிமத பிரிவு முதலியவைகளைக் குறிக்கக்கூடிய குறிப்புகள் எதையும் பொது ஆதாரங்களில்(ரிகார்டுகளிலிருந்து) எடுத்து விடுவதற்கும், அம்மாதிரிப் பட்டம் உடையவர்களைப் பொது வேலைகளில் இடம் பெறாமல் இருக்கும்படி செய்வதற்கும் அனுமதி பெறுதல்.

7. முனிசிபாலிடி முதலிய ஸ்தலஸ்தாபனங்களின் மூலமாகவே போக்கு வரவு சாதன வசதி, வீட்டு வசதி, பால் வசதி, வைத்திய வசதி, முதலியவைகள் நடைபெறும்படி ஏற்பாடு செய்யவேண்டும்.

8. இவைகளை நிறைவேற்ற சட்டசபை, முனிசிபாலிட்டி முதலிய ஜனப் பிரதிநிதி ஸ்தாபனங்களுக்கு மேல்கண்ட கட்சியினர் பேரால் அபேக்ஷகர்களை நிறுத்தவேண்டும்.

9. கட்சி அபேக்ஷகர்கள் மேல் கண்ட திட்டங்களுக்கு உறுதிகூறி கையெழுத்திடவேண்டும்.

10. மேல்கண்ட சட்டங்கள், சீர்திருத்தங்கள் முதலியவைகளை எல்லாம் சட்டசபைப் பிரவேசம் மூலம், பிரசங்கமூலம், செல்லுவதன் மூலம் பத்திரிகைத் தண்டும் பிரசுரம் முதலியவைகள் மூலம் சட்டத்தை அனுசரித்துச் செய்யவேண்டியது.

---

### ராணுவ உத்தியோகஸ்தர் சுடப்பட்டார்.

பம்பாய் ராணுவ உத்தியோகஸ்தரான காப்டன் ஆர். எஸ். தாம்சன் என்பவர்பங்களாவின் தாழ்வாரத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கும் பொழுது, ஒரு சிப்பாய் அவரைச் சுட்டுவிட்டு ஓட்டம் பிடித்தான். காப்டனுக்கு பலத்த மாயமேற்பட்டு, ஆஸ்பத்திரியில் கிடக்கிறார்.







## தேகப் பயிற்சி.

(O. M. சோமசுந்தரம்)

தேகப்பயிற்சி திடமளிப்பதில் முதன்மை பெற்றிருப்பதால் அதைக் கைக்கொண்டு திடத்தோடு வாழ யார்தான் விரும்பார்கள்? நாம் அனைவரும் இவ்வுலகில் உயிர்பெற்று வாழ்ந்திருக்குமளவும் சுகசரீரிகளாய் இருக்கவேண்டியதே முதற் கடமை. ஒருவர் நோயற்று தேக சௌக்கியத்தோடு வாழ்வதே மேலானதாயும், பிரதானமாயும், பெருஞ் சிறப்பாயுமிருக்கின்றது. நாம் வசிப்பதற்காகக் கட்டும் வீடுகளும் மாடமாளிகைகளும், பலமாயும் ஒழுங்காயும் அழகானவையாயும் இருக்க வேண்டுமென எண்ணி, அவற்றை நன்றாய்ச் சுட்ட செங்கல்களாலும், பக்குவம் செய்த சுண்ணாம்பினாலும், உறுதியுள்ள மரங்களாலும் கட்டி முடித்துக் கண்காணித்துவருகிறோமன்றோ? அதே போன்று நாம் உயிருள்ளளவும் இடைவிடாமல் வசிக்கும் வீடான நமது தேகத்தை சுகத்திற்கேதுவாகிய தேகப்பயிற்சி, காற்று, ஸ்நானம், உடை, உணவு, பானம், நித்திரை முதலியவைகளால் செப்பனிட்டு வருவோமாயின் 'பிணி' என்னும் துன்பம் பற்றுதன்றோ? இஃதறியாச் சிலர் தேகப் பயிற்சி செய்யாது மனோதிடமிழந்து, தேக திடங்கெட்டுப் பல வியாதிகளுக்குள்ளாகிறார்களென்பது அனைவருமறிந்ததே. இவ்வுண்மையறியாத அவர்கள் அவற்றை மந்திர தோஷமென்றும், பேய்குற்ற மென்றும், முனிபிடித்து விட்ட தென்றும், சுவாமி குற்ற மென்றும் தப்பித எண்ணங்கொண்டு பொருளைக் கண்டபடி வாரி இறைக்கின்றனர். என்னே! அறியாமை! இவ்வறியாமை நீங்க ஒவ்வொருவரும் "மனத்தால் தேகமும், தேகத்தால் மனமும்" பலனடையச் செய்யவல்ல தாயிருக்கின்ற தேகப்பயிற்சியைக் கைக்கொள்ள வேண்டுவது மிக்க அவசியம். நாம் தேகாரோக்கியத்தைப்பற்றி யுன்னுங்கால், மானிட வாழ்க்கையில் சுகமனுபவிக்குங் காலம் மிகச் சொற்ப மென்பது விளங்குகிறது. இச்சிறுகாலத்தினையும் நாம் அறிவில்லாமல் வீணாக்குவோமாயின், இப்பிரபஞ்சத்தில் இப்பிறவி எடுத்தது பயனற்றதாகுமல்லவா? இவ்விதக் குறைகளை நிவர்த்திக்க நாம் என்செய்தல் வேண்டும்? சரீரத்தை அதிசீக்கிரத்தில் கெடுத்து, நமக்குத் துன்பத்தையும், பணச் செலவையும் உண்டாக்கும் நோயை நம் தேகத்தினின்றும், நம் நாட்டினின்றும் விரட்ட இளைஞர்களே முன்வாருங்கள்! சிலர் தேகப்பயிற்சி செய்ய வாரம்பித்த சில வாரங்களிலேயே தேகக்கட்டும், நல்ல பலமும் கிடைக்கவில்லையே என விட்டுவிடுகின்றனர். அங்ஙனம் என்னையும் சில நண்பர்கள் வினவினர். சிறிய காலத்திற்குள் பெரிய பயன் கிடைப்பது அரிதன்றோ? "தெய்வத்தாலாகா தெனினு முயற்சி தன் மெய்வருத்தக் கூலிதரும்" என்றபடி முயற்சிக்குத் தகுந்தபயன் தானே கிடைக்கும். நிபுணர்கள், மேதாவிகள், அறிஞர்கள் எனப்பெயர் பெற்றுப் புகழுடன் விளங்குபவர்களின் சரித்திரத்தை ஆராய்ந்தால், அவர்கள் கொண்ட கருத்து நிறைவேறப் பல ஆண்டுகள் பிடித்திருப்பதாகவே அறிகிறோம். ஆனாலும், தேகசுகத்தைப் பாதுகாக்கும் வழிகளைக் கற்றுக்கொள்ளவும், நல்ல தேகத்தை யடையவும் பல வருடங்கள் காத்திருக்க வேண்டியதில்லை. நல்ல ஆராய்ச்சியோடு தேகப்பயிற்சி செய்யப்படின் இரண்டு அல்லது மூன்று ஆண்டுகட்குள் நல்ல தேகக்கட்டும், மேலான பலமும் பெறலாமென்பது சிறியேன் அனுபவம், எத்தொழிலைச் செய்யினும் தேகபலமே முக்கிய ஆதாரமாயிருக்கிறது. சிலர் சம்பாத்திய மொன்றையே பிரதானமெனக் கருதி சுகத்தையும் பலத்தையும் அலட்சியம் செய்கின்றனர். அதனால்நோய் வாய்ப்படுகின்றனர். நோயுற்ற பின்னர் கடவுளை நொந்து கொள்ளுகின்றனர். அறியாமைக்குக் கடவுள் என் செய்வார்? சிலர் ஆரோக்கிய வழிகளை அறிந்திருந்தும் நமக்கு எழுத்து வேலையதிகம், படிப்பு வேலையதிகம், இவைகளினால் தேகப்பயிற்சி முதலிய சுகாதார வசதிகளைக் கவனிக்க முடியாமலே போய்விடுகிறதென இயம்புகிறார்கள். இவைகளை நாம் எப்படி ஒப்புக்கொள்ள முடியும்? தமது சொந்தச் சுகத்தைப்பேண இவ்வளவு சோம்பல்பட்டால், குழந்தைகளின் சுகத்தையோ அன்றிப் பிறரின் சுகத்தையோ எங்ஙனம் காக்கவியலும்? இவர்கள் அவ்வளவு அதிகமாய்ச் செய்ய முடியாவிடினும் குறிப்பிட்ட காலத்தில் முடிந்த அளவு சிறிது சிறிதாய்ச் செய்யலாமல்லவா?

சகோதரர்களே! சகோதரிகளே!! பெரியோர்களே!!! நீங்களும், உங்கள் குழந்தைகளும், நோயற்ற வாழ்வும் தேகபலமும் நல்ல திடகாத்திரமும் பெற்றுவாழ வேண்டு மென ஆசைப்படுவீர்களாயின், பிரதிதினமும் தவறாது தேகப்பயிற்சி செய்ய முயலுங்கள். நீங்கள் நன்மை எனக்கொண்ட ஓர் காரியத்தைத் தாமதியாது சீக்கிரம் ஆரம்பிக்கப் பின்வாங்காதீர்கள். இரண்டோரம்முயன்று விடுவீர்களேயானால் அதன்வழி நீங்கள் செல்லுவதைக் காண்பீர்கள். நல்லது நன்மையே பயக்கும்.

## அமெரிக்காவின் அதிசய ரயில் வண்டி.

### மணிக்கு 100 மைல் வேகத்தில் பிரயாணம்.

### 16,000 டன் எடையுள்ள சாமான்களை இழுத்துச் செல்கின்றது.

ரயில் வண்டியை ஆதியில் கண்டு பிடிப்பதற்கு உதவியாயிருந்தவர் ஜியார்ஜ ஸ்டீபன்சன் என்பவராம். அவருடைய முதல் வண்டி "ராக்கெட்" என்று அழைக்கப்பட்டது. அதனைக் கண்டு பிடித்த போது ஸ்டீபன்சன் தாம் உலகிற்கு எவ்வளவு பெரிய நன்மையை செய்கின்றோமென்பதை அறியவேயில்லை. ஆனால் இன்று அவருடைய ராக்கெட் செய்து வரும் அற்புதம் எழுதும் தரத்ததல்ல. அமெரிக்காவில் அந்த ராக்கெட் (இப்போது ரயில் வண்டியாயிருக்கின்றது) பிரமாண்டமான உருவில் இயங்குவதோடு பெரும் பெரும் மலைகளையும் குன்றுகளையுமவிசையாகவும்எளிதிலும் தாண்டி விடுகின்றது. அன்றி சமநிலங்களில் அது முழங்கிச் செல்லும் ஆர்ப்பாட்டத்தைக் கண்டால் எவனும் ஸ்தம்பித்துப் போவான். இதனைப்பற்றியொரு ஆங்கிலப் பத்திரிகை யெழுதுவதாவது:—

### 480 டன் வண்டி.

ஆதியில் ரயிலைக் கண்டு பிடித்த ஜார்ஜ் ஸ்டீபன்சனின் எண்ணம் எதுவாக விருந்த போதிலும், சுமார் ஒரு மைல் நீள முள்ள வண்டிகளை—அதாவது 16 ஆயிரம் டன் எடையுள்ள 'வாகன்'களை தற்போதிய ரயில் இழுத்துக் கொண்டு காற்றாய்ப் பறப்பதென்றால் எவனுலாவது அதிசயப் படாமலிருக்க முடியுமா!

ஆதியில் செய்யப்பட்ட 'ராக்கட்' வண்டி 15 டன் எடையேயிருந்தது. மேலும் அதன் வலிமையைப் பலர் வெகுவாக சந்தேகிக்கவும் செய்தனர். ஆனால் இன்று அமெரிக்காவில் ஓடுகின்ற மாமத் ஆவி வண்டிகள் 480 டன் எடையிருக்கின்றன; வென்றாலும் அவை இயங்கும் முறையும் ஓஞ்சிற்றேனும்சந்தேகத்துக்கிடமில்லை,

ஆதியில் ரயில்வேக்கள் ஏற்பட்டபோது ஜனங்கள் அவற்றை அவ்வளவாக நம்பவில்லை. மேலும் ரயில்வேக்களுக்காகப் பணம் கொடுத் துதவுவதையும் வெறுத்தார்கள். ஆனால் இன்று அவை அடைந்திருக்கும் அபிவிருத்தியின் ஏதுவால்ரயில்வேக் கம்பனிகட்காகப் பணம் கொடுத்தவர்கள் அடையும் லாபம் எளிதானதல்ல. ஆவி ரயில்வேக்கள் போக, மின்சார ரயில் வண்டிகளும் தற்போது ஏற்பட்டுவிட்டன. 'சிட்னி சன்' என்றபத்திரிகை நீராவியால் ஓடும் வண்டிகளை மின்சாரத்தால் ஓடும் வண்டிகளை விட பல மிக்கவை யென்று கூறுகிறது. நாட்போகப் போக நீராவி வண்டிகள் பலத்தினும் வலுவிலும் விசையிலும் மேம்பாடெய்துகின்ற தென்பதில் சந்தேக மில்லை.

### மணிக்கு 133 மைல்.

மணிக்கு 100 மைல் விகிதம் ரயில் வண்டிகள் ஓடுவது சர்வசாதாரணமாம். நல்ல ரோடும், உறுதியான தண்டவாளங்களுமிருந்தால், எந்தவிடத்திலும் 100 மைல் ஓடும் வண்டிகளை உபயோகிக்கலாம். இங்கிலாந்தில் மணிக்கு 90 மைல் விகிதம் ஓடும் வண்டிகள் கட்டப்படுகின்றன. அமெரிக்காவில் பெனின்சில்வேனியா கம்பனியார் 100 மைல் ஓடும் வண்டிகளை செய்து வருகின்றார்கள்.

சுமார் 27 வருடங்கட்கு முன்பு, கிரேட் வெஸ்டேர்ன் ரயில்வேயில் ஒரு மெயில் வண்டி மணிக்கு 103 மைல் விகிதம் ஓட்டப்பட்டது. அவ்வாறு ஓடியது சிறிதுாரம் மட்டிலுமே. அந்தத் தூரத்துக்குள் எவ்வித சேதமு மேற்படவில்லை. ஆனால் அதே ரயிலை நல்ல உறுதியான தண்டவாளத்தில் 100 மைல் விசையில் அபாயமின்றி ஓட்டலாம் என்று கண்டு சொன்னப்பட்டது.

அதேகாலத்தில் ஜர்மனியில் ஜோஜன் என்ற விடத்தில் ஒரு மின்சார ரயில் வண்டி மணிக்கு 133 மைல் வேகத்தில் ஓடிற்று. அத்தகைய விசை மிகவும் செலவுடைய தென்று எண்ணப்பட்டு வந்தது.

நீண்டநாளாக மின்சார ரயிலுக்கும் நீராவி ரயிலுக்கும் போட்டி யேற்பட்டு வருவதாகக் காண்கிறோம். நீராவி ரயிலைப்பற்றிச் சொல்லக்கூடியகுற்றம் புகை, கரி முதலியன பிரயாணிகளை தொல்லை செய்யுமென்பது தான். ஆனால் விசையைப்பற்றிய கேள்வியே யில்லை. அமெரிக்கர் இருவித வண்டிகளையும் உபயோகப்படுத்துகின்றார்கள். சமீபத்தில் (சென்ற ஜூலை மாதம்) ஸ்விஸ் பெடரல் கம்பெனியார் செயிண்டு கோதார்டு லைனில் உலகில் பெரிய மின்சார வண்டியை விட்டார்கள். அது 600 டன் எடையுள்ள வண்டிகளை இழுத்துக் கொண்டு மணிக்கு 38 மைல் வேகத்தில் பல ஏற்றங்களையும் ஏறிச் சென்றது.

### 8000 டன் இழுக்கும் வண்டி.

ஐக்கிய நாடுகளிலேயே உலகில்பெரிய ரயில்வண்டிகள் காணக்கிடக்கின்றன. மணிக்கு 50 மைல் வேகத்தில் ஓடுகின்ற ஒரு ரயில்வண்டி 8000 டன் எடை சாமான்களையும் பிரயாணிகளையும் இழுத்துச் செல்கின்றது.

ஸ்விட்ஜர்லாந்து ரயில்வேக் கம்பனியார் தேசிய உணர்ச்சி மேலீட்டினாலும், தம் நாட்டில் நிலக்கரியை இறக்குமதி செய்து கொள்வதில் ஏற்படுகின்ற அதிகமான செலவை உத்தேசித்தும் நீராவியால் மின்சாரம் தயாரித்து ரயிலையோட்டும் முறையை அமலில் கொண்டுவர நிச்சயித்தனர்.

இங்கிலாந்தில் ஒரு அறிக்கை, எல்லா கம்பனிகளும் மின்சார ரயிலையே ஓட்ட வேண்டுமென்கின்றது. ஆனால் முக்கியமான கம்பனிகள் இதனை ஆக்ஷேபிக்கின்றன. தென்பகுதிக் கம்பனியென்ற ஒரு சிறுகம்பனி மட்டிலும் அறிக்கையின்படி நடந்துவருகிறது.

## இந்திய சட்டசபை.

### புதிய தேர்தலா?

இந்தியா சட்டசபையை வைசிராய் பிப்ரவரி 1௳ யன்று திறந்து வைப்பார். சர்க்கார் இலாகாக்கள் பிரசங்கத்திற்கு வேண்டிய புள்ளிகளைச் சேகரித்து வருகிறார்கள். தற்போதைய சட்டசபைகள் கலைக்கப்பட்டு, இப்பொழுதிருக்கும் வாக்காளர் ஜாபிதாவைக் கொண்டே புதிய தேர்தல் அடுத்த குளிர்காலத்தில் நடக்குமென்று சொல்லிக் கொள்ளப்படுகிறது.

### வைசிராய்க்கு திரு. பி. கேசவ பிள்ளையின் தந்தி.

திவான்பகதூர் பி. கேசவபிள்ளை பின்வரும் தந்தியை வைசிராய் லார்டு வில்லிங்டனுக்கு அனுப்பியிருக்கிறார்:—

சகல ஹிந்துக்களுக்கும் எவ்வித ஜாதி வேற்றுமைகளுமின்றி ஹிந்து ஆலயங்களில் பிரவேசிக்க உரிமையளிக்கும் பொருட்டு சென்னை சட்டசபையில் டாக்டர் பி. சுப்பராயனும், இந்தியா சட்டசபையில் திரு. சி. எஸ். ரெங்கய்யரும் கொண்டு வந்திருக்கும் மசோதாக்களை அனுமதிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறோம்.

### டாக்டர் சுப்பராயன் மசோதா. மதுரையில் கோரிக்கை.

30-ந்தேதி மாலை திலகர் சதுக்கத்தில் திரு. எம் நாராயணசாமி அய்யர் தலைமையில் உயர்ஜாதி இந்துக்கள் அடங்கிய மாபெருங் கூட்டம் நடைபெற்றது. அடியிற்கண்ட தீர்மானம் திரு. எ. வைத்தியநாதய்யரால் பிரேரிக்கப்பட்டு, திரு. கிருஷ்ண ஐயரால் ஆதரிக்கப்பட்டு கூட்டத்தில் ஏகமனதாக நிறைவேறியது.—

'சர்க்கார் முன்பு வைக்கப்பட்டுள்ள ஆலயப் பிரவேச மசோதாவை கொண்டுவர உடனே அனுமதி தருமாறு உயர்ஜாதி இந்துக்களடங்கிய இக்கூட்டம் வைசிராயை வேண்டிக் கொள்கிறது.''

(3ம் பக்கத் தொடர்ச்சி)

யிடம் பொய் சொல்ல மனம் வருமா? இறக்கத் தயாராக இருக்கும் யான் பொய் சொல்ல வேண்டிய அவசியமென்ன? உண்மையைச் சொன்னால் பிக்ஷு தடுப்பார். மீறினால் சட்டப்படி கைது செய்து விடுவார்கள். சாமியாரிடம் சென்றது பெரிய தண்டாவாக முடிந்து விட்டதே என்று யோசித்தேன். "ஏன் தயங்குகிறீர்கள்? தாங்கள் செல்லும் விஷயம் சொல்லக்கூடாததாயின் சொல்லவேண்டாம். நான் கேட்டதற்கு மன்னியுங்கள்" என்றார் பிக்ஷு. எனக்குத் துணிவு வந்துவிட்டது. உண்மையைச் சொல்வோம். மறுத்தாரானால் பார்த்துக் கொள்ளலாமென்று கருதி நடந்ததெல்லாம் சொல்லிவிட்டேன். அவரும் சிறிது நேரம் யோசித்துவிட்டு உபதேசிக்க ஆரம்பித்தார். மனிதன் இயற்கையான பொருள். இயற்கையான பொருள் தோன்றியவாறே இயற்கையாக அழிதலே நியாயமாகும். இடையில் மற்றவர் அதைச் சிதைப்பது தருமமல்ல. இன்பமும் துன்பமும் ஒரு வழி நில்லா. சுற்றுகிற சக்கரம் மேலுங்கீழுமாக உருளுவதைப் போல உருளுகிறது. கருமமானது நிகழ்ந்துகொண்டேயிருக்கிறது. துணியை நெய்பவன்வெள்ளை நூலிலேயேபாவோட்டிஊடும்கொடுத்தால், சுத்தமானவெள்ளை வேட்டிகளைக்காணலாம். இடையிடையேதவறிக்கறுப்பும் சிவப்புமான நூல்களை ஓட்டுவாரேயின் துணியின் நிறம் கலந்துதான் வரும். அதற்காக வருந்தியும் உடலைச் சிதைத்தும் அடையும் பயனொன்றுமில்லை. சாந்தம்—தைரியம்—அன்பு—அருள் இவற்றால் நிதானித்து மீளவதே கருமமாகும்'' என்று இளம் சந்யாசி கம்பீரமாகக் கூறினார்.

தொடரும்,

அஞ்சாநெஞ்சன்.

## மகாத்மாவின் தேக நிலை.

### வலதுகை குணமாகவில்லை இடதுகையால் எழுதுகிறார்.

மகாத்மாவின் தேக நிலையைப்பற்றி ஸ்ரீமான் ஸி. ராஜகோபாலாச்சாரியர் கூறியதாவது:—

அவருடைய தேகநிலை பொதுவாக நன்றாக விருக்கிறதென்று சொல்லலாம். ஆனால் அவரது வலது புஜம் அதிகக் கஷ்டத்தைக் கொடுத்து வருகிறது. அதிகமாக எழுத முடிவதில்லை. கடிதங்களையும் அவர் வாயாலேயே சொல்லுகிறார். அவரே எழுதவேண்டியிருப்பதை இடது கையால் எழுதுகிறார். அவரது வலது புஜத்தில் உஷ்ண வீக்ஷண்யத்தை அளித்து சிகித்ஸை செய்யப்பட்டு வருகிறது. இதுவரையில் எவ்வித அபிவிருத்தியும் ஏற்படவில்லை. வைத்தியர்கள் ஆலோசனையின் பேரில் அவர் நூல் நூற்பதை மீண்டும் ஆரம்பிக்காமலிருக்கிறார். உப்பில்லாதஆகாரத்தை அவர் புசித்து வருகிறார். அதன் மூலமாக வலது புஜம் குணமாகி விடுமென்று அவர் எதிர்பார்க்கிறார். அவர் பால் சாப்பிடுவதையும் அடிக்கடி நிறுத்திவிடுகிறார். அதனால் அவருடைய சரீர எடை குறைந்து இப்பொழுது 102 பவுண்டாக இருக்கிறது. இருந்தாலும் கவலைக்கு இடமில்லை.

### ஸ்ரீ ரஞ்சோத்லாலின் விடுதலை.

டில்லியில் கூடிய காங்கிரஸ் மகா சபைக்குத் தலைமை வகித்த ஆமதாபாத் மில் ஏஜண்டு சேத்ரஞ்சோத்லாலுக்கு 9 மாத கடுங்காவலும் 5000 ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டது. தண்டனை காலம் முடிவடைந்ததும் அவர் நாசிக் சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டார்,

### அவசரச்சட்டம். 14 ஜில்லாக்களில் அமல்.

சர்க்கார் அறிக்கை கூறுவதாவது;—'ஆக்ரா, அயோத்யாபுரி இவைகளைச் சார்ந்த 14 ஜில்லாக்களில் ஐக்கிய மாகாண அவசரச் சட்டத்தின் 3-வது செக்ஷனிலிருந்து 14-செக்ஷன் வரையில் அமுலுக்கு வரும். கிரிமினல் சட்டத் திருத்த சட்டத்தின் 4 வது செக்ஷனும் 7-வது செக்ஷனும் 20 ஜில்லாக்களில் அமுலுக்கு வரும். இந்த ஜில்லாக்களில் இந்தியன் பினல் கோடு சட்டத்தின் 188-வது செக்ஷன் படியோ அல்லது 5, 6-வது செக்ஷன்படியோ குற்றஞ் செய்தவர்களை ஜாமீனில் விடுதலை செய்யக்கூடாது.

### அமெரிக்காவைக்கண்டு பிடித்த வர்கொலம்பஸன்று.

ஆங்கிலேயர் ஒருவர் முஸ்லிம் மதத்தைத் தழுவி டாக்டர் காலெட் ஷெல்டரேக் என்று இப்பொழுது விளங்குகிறார். நெப்போலியன் என்ற பிரஞ்சு வீராதி வீரன் ஒரு முஸ்லிம் என்று இவர் சாதித்திருக்கிறார். அது மாத்திரமல்ல' உலக சரித்திரத்தையே மாற்றி யமைக்கக்கூடிய அபிப்பிராயங்களையும் அவைகளுக்குரிய ஆதாரங்களையும் அவர் கூறுகிறார். அமெரிக்கா என்ற புது உலகத்தை கொலம்பஸ் என்பவர் முதன் முதலாகக் கண்டுபிடித்தார் என்பதை இவர் மறுத்து. டென்மார்க்கு தேசவாசிகள் இங்கிலாந்தில் வசித்த காலத்தில் சிலர் அயர்லாந்துக்குச் சென்று அங்கிருந்து கப்பலில் அமெரிக்காவுக்குப் போய், அந்த நாட்டைக் கண்டுபிடித்ததாகச் சொல்லுகிறார். ஆகவே ஐரோப்பிய சரித்திராசிரியர்கள் தங்கள் பழைய ஏடுகளைப் புரட்டிப் பார்க்கவேண்டும்.

### வாரண்டில்லாமல் கைதுசெய்யலாம்.

ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டுகள், போலீஸ் கமிஷனர், ஜில்லா போலீஸ் சூப்ரண்டுகள், இரகசிய போலீஸ் சூப்ரண்டுகள் ஆகியவர்கள் சந்தேகப்படும் பேர்வழிகளை வாரண்டில்லாமல் கைது செய்யலாம் என்று பம்பாய்க் கவர்னமெண்டார் விசேஷ அதிகாரச் சட்டத்தின் கீழ் அறிவித்திருக்கிறார்கள். சந்தேகப்படும் பேர்வழிகள் "பொது நன்மைக்கு விரோதமாய் நடந்ததாக உத்தியோகஸ்தர்கள் எண்ணினால் போதுமானது. அவர்களை கைது செய்துவிடலாம்.







## தனவணிகத் தாய்மார்கட்கு வேண்டுகோள்.

(A. S. B. P. எழுதுவது)

தாய்மார்களே! சகோதரிகளே! உங்கள் அருமைப் பெண் மக்கள் பல வருடங்கட்கு முன்பு படிப்பில்லாமல் இருந்தார்கள்; நாகரிக வாழ்க்கை யறியாதவர்களாக இருந்தார்கள். அவர்களின் மேலான அறிவு முழுமையும் ஒப்பாரி கற்றுக் கொள்வதிலும் சாணந்தட்டுவதிலும் வீண்சண்டையிடுவதிலும் காதில் எந்த இடத்தில் இன்னும் (நகை யணிவதற்கு) துவாரங்கள் போடவேண்டிய பாக்கியிருக்கிற தென்று ஆராய்வதிலுமே ஈடுபட்டிருந்தது. காலக்கிரமத்தில் பல சீர்திருத்தப் பெரியார்களின் தீவிரப் பிரசாரத்தின் பயனாகப் பெண் மக்கள் படிக்க வேண்டுவது அவசியமெனவும் அநாவசியமான நகைகளையெல்லாம் விடுத்துக் காதுக்குத் தோடு ஒன்றே போதுமெனவும் உங்களிற் பலர் உணர்ந்து தங்கள் பெண் மக்களைப் பள்ளிக்கனுப்பி வரலாயினர். இதற்கெனப் பல பாடசாலைகளும் தனவணிக நாட்டில் ஆங்காங்கே பெண் உயர்வு விரும்பும் பல பெரியார்களால் நிறுவப்பெற்றிருக்கின்றன. ஆனால் பள்ளிக் கனுப்பப்பெற்ற உங்கள் பெண்களைச் சரிவரப்படிக்க வைத்திருக்கின்றீர்களா? என்பதைச் சிந்திக்கும் பொழுது வருந்தத்தக்கதாகவே இருக்கின்றது. உங்களிற் சில தாய்மார்கள் தமது பெண்களைப் பள்ளியிற் சேர்த்த ஒரு வருடத்திலும் சிலர் ஆறு மாதத்திலும் சிலர் நான்கு மாதத்திலும இன்னும் சிலர் இரண்டு மாதத்திலும் படித்தது போதுமென நிறுத்தி விடுகின்றார்கள். அவர்களிடம் சென்று "ஏன் படிப்பை நிறுத்திவிட்டீர்கள், பாடசாலைக்கு ஏன் இப்பொழுது போகச் சொல்லுவதில்லை'' என்றுகேட்டால் 'பெண்ணைப் பிறந்தவள் வீட்டு வேலை கற்றுக் கொள்ள வேண்டாமா? படிப்புப் படிப்பின்னு பள்ளிகூடத்திற்கே போய்என்ன செய்கிறது; வீட்டிலே கைப்பிள்ளை எப்பப் பார்த்தாலும் அழுதுகொண்டே இருக்கிறது. அதை எடுத்து வைத்துக்கொள்ள ஆளில்லை; ஒரு கூப்பிட்ட குரல் கேட்கவும் கிட்டத்திலே ஒருத்தருமில்லை; இதையெல்லாம் உத்தேசித்துத் தான் வீட்டிலிருந்தால் எங்களுக்குக் கைக்குதவியாக இருக்கு மின்னு எண்ணிப் பள்ளிக்கூடம் போக வேண்டாமென்று நிறுத்திவிட்டோம்' என்று (பெண்களின் பாஷையில்) உங்களிற் பலர் கூறுகின்றதை நீங்கள் ஒப்புக் கொள்ளுவீர்கள். மேற்சொல்லியுள்ள வேலைகளுக்கெல்லாம் ஒரு வேலையாளை அமர்த்திக் கொள்ளுவதுதான் நியாயமாகுமேதவிர, உலகையாளும் சக்தியைப்பெறக் கூடிய உங்கள் பெண் மக்களைப் பிள்ளை தூக்குவதிலும் பிறவேலைகளிலும் போட்டு அவர்களின் அறிவு வளர்ச்சிக்குத் தடை செய்வது நியாயமாகுமா?

தாய் மார்களே! மேல் நாட்டுப் பெண்களைச் சற்று நோக்குங்கள்! மலையாளத்தைப் பாருங்கள்! அங்கெல்லாம் பெண்கள் எப்படி வாழுகின்றார்கள்? ஆகாயராணி அமீஜான்ஸன் தன்னந் தனியாகத் தனது விமானத்தை இரவு பகலாக நடத்திச் செல்லுகின்றார்! நம் நாட்டு சரோஜனி தேவியை, லீலாவதி முன்ஷியை, கமலா நேருவைச் சற்று சிந்தித்துப் பாருங்கள்! இன்றைக்கு அவர்கள் உலகம் புகழத்தக்க நிலைமையிலிருப்பதற்குக் காரணம் அவர்களின் கல்வியல்லவா! நீங்கள் உங்கள்பெண்களுக்குப்பத்துஅடுக்குச்சட்டி வைப்போமா, பதினைந்துஅடுக்குவைப்போமா, வங்காள அண்டாவில் எத்தனைவைப்போம், பிள்ளை பிறந்ததும் எந்தக் கோயிலுக்கு எத்தனை முறை முடியிறக்க வேண்டும் என்பதையே சிந்தித்துக் காலத்தைக் கழித்துக் கொண்டிருந்தால் எவ்விதம் உங்கள் சமூகம் முன்னேற்றமடைய முடியும்? இவ்வித அறியாமைக் கெல்லாம் காரணம் படிப்பின்மை யல்லவா? கூந்தலைப் பற்றிச் சிறிது கூறவிரும்புகிறேன். மனிதருக்கு அதிலும் பெண்களுக்குக் கூந்தலல்லவா அழகைத் தருவது; அக்கூந்தலை சுவாமியின் பிரார்த்தனை என்று எடுத்துத் தோற்றத்தை விகாரமாக்கிக் கொள்ளுவது உங்கள் அறிவின்மையை விளக்கிக் காட்டவில்லையா? சுவாமிக்குப் பிரார்த்தனை இருந்தால் பாற் பொங்கல் வைத்துப் பசியால் வாடும் ஏழை மக்களுக்கு அளிப்பது தான் முறையாகும். அதைவிடுத்து உங்கள் கோரிக்கையைப் பூர்த்தி செய்து தந்த சுவாமிக்கு மயிரைக் கொடுப்பது நியாயமாகுமா? அது சுவாமியை ஏமாற்றியதாக வல்லவா முடியும்? ஆண்மக்களெல்லாம் தலையில் மயிர்வைத்துக் கொண்டிருக்கும் இந்நாளில் கூந்தலுக்குடைய நீங்கள் சுவாமியின் பிரார்த்தனை என்று சொல்லி எடுக்கலாமா? சுவாமிக்கு முடியிறக்காமலிருந்தால் சுவாமி கோபித்துக் கொள்ளார். அவர்உங்களிடம் மயிரைக் கேட்கவில்லை. ஒருக்காலும் கோபித்துக் கொள்ளார். வேண்மோனால் நீங்கள் சோதனை பாருங்கள். நீங்கள் படித்திருந்தால் இம்மாதிரியான மூடப்பழக்கங்களையெல்லாம் கைக்கொள்ள மாட்டீர்கள் என்பது நிச்சயம். போனது போகட்டும். உங்கள் பெண்களை யாவது நன்றாகப் படிக்கவைத்து அறிவுடையவர்களாக ஆக்கி உலகில் பிரகாசிக்கச் செய்யுங்கள். இதுவே எனது வேண்டுகோள். ஒரு பாடசாலையில் படித்துவரும் தனவணிக மாணவிகளிற் சிலர் சமீபத்தில் எனது நண்பர் ஒருவருக்கு எழுதிவந்த கடிதங்களைப் பார்க்க நேர்ந்தது. அதில் ஒவ்வொரு வரும் பாடசாலை செல்வதற்குப் பலவித இடையூறுகள் நேருகிறதெனப் பலவாறாக எழுதியிருக்கிறார்கள். இக்குறையை நீக்கி அவர்களை உற்சாகப்படுத்திப் பாடசாலைக்கு அனுப்பும் படியாக உங்களைப் பணிவுடன் வேண்டிக் கொள்கின்றேன்.

எனது சகோதரர்களுக்கு ஒன்று கூறுகிறேன். இக்கட்டுரையைப் பெண்களுக்குத் தாய்மார்களாகவும் சகோதரிகளாகவும் உள்ள ஒவ்வொரு வரும் தான் கட்டாயமாகப் படித்துப்பார்க்க வேண்டும். அவர்களில் ஒரு சிலர் படித்தவர்களாக இருந்தாலும் பத்திரிகை பார்க்கும் பழக்கமுடையோர் அதிலுஞ் சிலரேயாம். எனவே இதைக் கண்ணுறும் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் தாய்மார்களுக்கும் சகோதரிகளுக்கும் படித்துக் காண்பிக்கும்படியாக வேண்டுகிறேன். ஆசிரியர்கள் ஒவ்வொரு வரும் மாணவிகட்கும் மாணவிகளின் தாய்மார்கள் சகோதரிகள் ஒவ்வொருவருக்கும் இதைப்படித்துக் காண்பிக்கும் படியாகக் கேட்டுக் கொள்ளுகின்றேன். இதுவே எனக்குச் செய்யும் உதவியாகும்.

### பிரிட்டனில் பௌத்தாலயம் 10 ஆயிரம் பவுனில் கட்டப்படும்.

பிரிட்டன் தனக்காக லண்டனில் ஒரு புத்த ஆலயத்தைக் கட்டப்போகின்றது. ஏற்கெனவே லண்டனில் ஒரு மிஷன் இருந்துகொண்டு புத்தமதத்தத்துவங்களை போதனைசெய்து வருகிறது. இம்மிஷனின் வேலையே மேற்சொன்ன ஆலய நிர்மாணம், புதிதாய் கட்டப்படப் போகும் ஆலயத்திற்கு 10 ஆயிரம் பவுன் செலவாகுமென்று திட்டம் போடப் பட்டிருக்கின்றது. இத்தொகையை பெரும்பாலும் பௌத்த நாடுகளிலிருந்தே வசூல் செய்ய வேண்டுமென்பது விருப்பம்.

ஆலயம் கட்டுவதற்கு முன்னறிகுறியாய் மேற்சொன்ன மிஷன் ஏராளமான மக்களை புத்த மதத்திற்குத் திருப்பியிருக்கின்றது. இவர்களில் பெரும்பான்மையோர் பெண்களாம். புத்தமதத்தில் பலபிரிவுகளிருந்தபோதிலும் இங்கிலாந்தில் போதனை செய்யப்படுவது ஆதிமதமாகும். அதன் தத்துவங்கள் எளியதாகவும், எல்லோரும் ஏற்றுக்கொள்ளத் தக்கதாகவு மிருக்கின்றன. தியாசபிகல் சொஸைடியார் (பிரம்ம ஞானசமாஜத்தார்) லண்டனில் செய்த பிரசாரம் இப்புத்தமதப் பிரசாரத்துக்கு அனுகூலமா யிருக்கிறது.

ஆசிரியர்:— ஜீக்கோஸ்லோவேகிய எவ்வளவு தூரமிருக்கிறது?

மாணவன்:— ஒருவருடமாகப் படித்தும் என் வாய்க்கு வாராத அவ்வளவு தூரமிருக்கிறது.

நமது வைத்தியசாலை பழனியில் ஸ்தாபித்து 30-வருஷம் ஆகிறது பழனியில் முதல் முதல் ஸ்தாபிக்கப்பட்ட வைத்தியசாலை இதுவேயாகும்.
(ரிஜிஸ்டர்.)



# பழனி வைத்திய ஆசிரியர் ஆர். எம். கே. வேலுசாமி பிள்ளை அவர்களின்

# தாம்பரபஸ்பம்.

## சாப்பிட்டு தீராத குஷ்டரோகங்களெல்லாம் தீர்ந்துவிட்டதற்கு அடையாளமான போட்டோ படங்களையும், நற்சாட்சிகளையும் கவனித்து மருந்தை வாங்கிச் சாப்பிடுங்கள்!

**100 வேளை தாம்பிர பஸ்பம் அனுபானத்துடன் ரூபா 50. 50-வேளை ரூபா 25. ஏழைகளுக்குப் பாதிவிலை.**

சுகம்.



வியாதி.



தொடை இவைகளில் வெளி
எனக்கு 10-வருஷ காலமாக நெற்றி, மார்பு, புஜம், முதுகு, தொடை இவைகளில் வெளி
ரிய செம்மேகப் பத்துக்களுண்டாகி கெண்டைக்காலில் கருப்பு பத்துக்கள் விழுந்தும் திமி
ரேரி சுரணையற்றுப்போய் உள்ளங்கை நெளிந்து விரல்கள் மடங்கி ஒவ்வொரு விரல்களா
ய்ப் புண்ணாகி இத்து இத்து விழுந்துவிட்டது. இப்படியே கால் விரல்களும் ரணமாகி இத்து
விழுந்துவிட்டது. காலில் குழிப்புண்ணும் விழுந்து புரையோடி கை, கால் ரணங்களுடன்
நான் அவஸ்தைப்பட்டேன். தங்கள் தாம்பிர பஸ்பம் வாங்கிச் சாப்பிட்டதில் விரல் ரணங்க
ளெல்லாம் மொன்னையாகியமட்டில் ஆறிவிட்டது. மடங்கிப்போன விரல்கள் எல்லாம் நிமிர்
ந்துவிட்டது. குழிப்புண்ணும் மளமளவென்று ஆறி பத்துக்களெல்லாம் மறைந்துவிட்டது.
திமிர் நீங்கிச் சொரணையுண்டாகிவிட்டது. அதற்கடையாளமாக ஆதியில் ஒரு போட்டோவும்
இன்று ஒரு போட்டோவும்பிடித்துக்கொடுத்திருக்கிறேன். இதைத் தாங்கள் அவசியம் பேப்
பரில்பிரசுரிக்கவேண்டியது. அப்பொழுதுதான் ஜனங்கள் நம்புவார்கள். ஷை ரணங்களில்
சீழ் வடிந்து அதுகளில் ஈ, எறும்பு மொய்த்து துர் நாற்றம் சகிக்கமுடியாமல் உயிரோடுநரக
வேதனையில் அழுந்தினேன். நான்பட்ட கஷ்டத்தை சொல்லவும் எழுதவும் முடியாது. என்
னைப் பார்த்தவர்களெல்லாம் பரிதாபப்படுவார்கள். எத்தனையோ ஊசிபோட்டும் அநேக மருந்
துகள் சாப்பிட்டும் ரணங்கள் ஆறவில்லை. தங்கள் தாம்பர பஸ்பம் 6-மீ சாப்பிட்டதில் என்
குஷ்டரோகம் பூரா சொஸ்தமடைந்தது
**கோவிந்தசாமி**, திருக்கோவிலூர், 6—3—28.

சொல்லுவதைக் கவனியுங்கள்:—தங்
நமது தாம்பர பஸ்பத்தால் வெள்ளைக்குஷ்டம் தீர்ந்ததாகச் சொல்லுவதைக் கவனியுங்கள்:—தங்
களுடைய தாம்பிரபஸ்பத்தை 20 நாள் சாப்பிட்டேன். சரீரத்திலுள்ள வெண்மேகங்களும் காலிலிருந்த
கட்டிகளும் பூர்ண சௌக்கியம். தங்கள் வைத்தியசாலை மேன்மேலும் பெருக கடவுளைப் பிரார்த்திக்
கிறேன். **N. K.** கோவிந்தன் செட்டியார் சிகப்பு வியாபாரம், நெ. 95, செங்குந்தர்வீதி, புதுச்சேரி.

**கரூர் தாலூகா பள்ளபட்டி நத்தர்சா ருவுத்தர், போட்டோ படத்தையும் நற்சாட்சியையும் கவனியுங்கள்:—**



எனக்கு இரண்டுகாலும், கை, வயிறு, உடம்பு பூராவும் வீங்கி வலதுகாலில் 4 குழிப்புண்ணும், இடதுகாலில்
குழிப்புண்ணும் புரைரோடி சியும் ஒழுகி வலதுகால் பெருவிரல் இத்துக் குடவரையாய்விட்டது. மேலெல்லாம்
மொத்தை மொத்தையாய் சிகப்புத் தடிப்புகளுமிருந்தது. தங்கள் தாம்பரபஸ்பம் ஒரு மண்டலம் வாங்கிக்கொண்டு
போய்சாப்பிட்டதில் தடிப்புகள் மறைந்து, காலிலுள்ள குழிப்புண்களெல்லாம் ஆறிவிட்டது. வலதுகால்பெருவிர
லடியிலிருந்து ஒரு ஆணியானது கடவாய்ப்பல் மாதிரி அடியில் ஒரு கட்டையேற்பட்டு அதிலிருந்து ரோமம் மாதிரி
நரப்பு ஏற்பட்டு 2 அங்குல நீளம் விழுந்தது. பொலையைப் பஞ்சில் நனைத்துப்போட்டு வந்தேன். ஒரு
மாதத்தில் ஆறிவிட்டது. மற்ற ரணங்களில் முளை ஏற்பட்டு நாளுக்குநாள் துருத்தி வெளியே வந்து தானே விழு
ந்துவிட்டது. இனி நான் பிழைப்பேன் என்று யாரும் நம்பவேயில்லை. 70-மைல் என்னை வண்டியில்போட்டு தங்
களிடம் கொண்டுவந்தார்கள். தாங்களும் நேரில் பார்த்து பிழைப்பதரிதென்றும், இங்கிருந்து மருந்து சாப்பிடக்
கூடாது ஊருக்கேபோய் மருந்து சாப்பிடுங்களென்று தாம்பர பஸ்பமும், கு. சூரணமும் கொடுத்தீர்கள். அந்தப்
படி நான் ஊருக்குப்போய்ச் சாப்பிட்டேன். என் குஷ்டவியாதி பூராவும் சொஸ்தமாகிவிட்டது. அதற்கடையாள
மாய் நானும், இரண்டு காலும் முடங்கி நடக்கமுடியாமல் முடக்குச் சூலையால் கஷ்டப்படும் அப்துல் அஜீஸ்என்ப
வரையும் கூட்டிவந்து இன்றையதினம் நேரில் வந்து போட்டோ பிடித்துக் கொடுத்திருக்கிறேன்.
**நத்தர்ஸா ருவுத்தர், 23—8—27.**

இவருக்குள்ள குஷ்டரோகம் சொஸ்தமானதைப்பார்த்து ஆச்சரியப்பட்டு எங்களுக்கும்வேண்டிய மருந்துகளை
பெற்றுக்கொள்ள நாங்கள் வந்திருக்கிறோம். மேற்படி நத்தர்ஸா ருவுத்தர் சாட்டிபிகேட்டை நாங்கள் ஆமோதிக்கி
றோம். (Sd) ப. கா. வெள்ளையப்பா ருவுத்தர். சி. சே. மு. பொட்டா காதர்மீரா உசேன்ராவுத்தர்.



**புடையன் பாம்புகடியால் குஷ்டரோகம் வந்து காலில் குழிப்புண் விழுந்து விரல்கள் எல்லாம் அழுகி இத்து விழுந்து மூக்கு அழுகி ரணமாகிப்போன நிலைமையிலும் சொஸ்தமாகியிருப்பதைக் கவனியுங்கள்:—**

முத்துவீரன் சேர்வை மகன்
திண்டுக்கல் மேட்டுப்பட்டி வீரக்கல். எனக்குப் பெண்கொடுத்த மாமனாராகிய முத்துவீரன் சேர்வை மகன்
முத்துவீரன் சேர்வை அவர்களுக்கு புடையன் பாம்பு 15-வருஷத்திற்கு முன் வாலால் குத்தியது. அதனால் காலில்
ரத்தம் வரவில்லை. ஷை பாம்பு கொத்திய இடத்தில் குழிப்புண் விழுந்தது; அந்தப் பெருவிரல்
பகுதி இத்து மொண்ணையாய்விட்டது. இடதுகால் பவுத்திர விரல் அழுகி இத்து விழுந்துவிட்டது. இந்த ரணங்
களுடன் மேலெல்லாம் சிட்டை சிட்டையாய் செம்மேகப் பத்துக்கள் ஏற்பட்டிருந்தது. காது, மூக்கு, கை, தாவாக்
கொட்டை மார்பு இவைகளில் உருண்டைக் கட்டிகளிருந்தது. தீப்பட்டாலும் தெரியாதபடி சொரணையற்றுப்போய்
விட்டது. வலது காலில் ஒரு மூள் குத்தி ஊடுருவி பொத்து வெளியே பிதுங்கிவிட்டது. அது அவருக்குத் தெரி
யாதென்றால் எவ்வளவு சுரணையற்றுப்போயிருந்திருக்கும். அப்பேர்ப்பெற்ற திமிர் நீங்கி சொரணையுண்டாகிவிட்
டது. கை பத்து விரல்களெல்லாம் வளைந்து ரணமாக இருந்தது. மூஞ்சி வீங்கி மூக்கு உள்ள அழுகி மூக்கைத்
தின்றும் மூக்குச் சப்பளிஞ்சும் போய்விட்டது. இந்த நிலைமையில் தங்கள் தாம்பர பஸ்பம் வாங்கி ஒரு மண்டலம்
சாப்பிட்டதில் கால் ரணங்களெல்லாம் ஆறிவிட்டது. கை ரணங்களெல்லாம் ஆறிப் புதிய நகம் முளைத்துவிட்டது.
காதில் குணுக்குப்போட்டு ஆட்டினால் எப்படி ஆடுமோ அப்படியுள்ள உருண்டைக்கட்டிகளும் கரைந்துசப்பென்று
வத்திவிட்டது. திமிர்நீங்கி சுரணையுண்டாகிவிட்டது. அவருக்குள்ள குஷ்டரோகம் பூராவும் சொஸ்தமாகி விட்
டது. ஆகையால் எனக்கிருக்கும் ரத்தகாச ரோகத்திற்கும் நேரில் வந்து மருந்து வாங்கிச் சாப்பிட கூட்டிக்கொண்டு
வந்திருக்கிறேன்.
**—சுப்பஞ் சேர்வை.**

**வைத்திய ஆசிரியர், R. M. K. வேலுசாமி பிள்ளை,**

**சித்த வைத்தியசாலை, பழநி.**

தந்திவிலாசம்:—"வேலுசாமி" பழனி. Tel Address: "Veluswamy" Palni

Edited, Printed and Published by S. MURUGAPPA for Dhana Vysian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi.

